வெள்ளை நிறமே
சலிச்சுப்
போச்சு!

ஆயிரத்திலே
ஒரு பேச்சு.

டில்லியிலே
ஆரஞ்சு
நிறத்துக்குத்
தனி மவுசு.

இன்றைக்கு
ஒரு கட்சி,
நாளைக்கு
ஒரு கட்சி,
நல்ல கூத்து!

ஆரஞ்சு என்றாலே
அத்தனை பேரும்
பின்னாலே
ஓடுவாங்க.

சுவை நிறைந்தது.
மணம் மிகுந்தது.
தாகம் தணிப்பது.
உற்சாகம் அளிப்பது.
புதுவேகம் தருவது.

கோல்ட் ஸ்பாட்®
கூட்டங்களில்
விறுவிறுப்பேற்றி
சுறுசுறுப்பூட்டுகிறது—
வலது என்றாலும்,
இடது என்றாலும்,
மிதவாதம் என்றாலும்,
தீவிரவாதம் என்றாலும்
அல்லது நேற்று முளைத்த
புதுக்கட்சி என்றாலும்
புதுத் தெம்பு ஊட்டுகிறது!

கொடி மாறினாலும்,
கோட்டை மாறினாலும்,
குறைவற்ற குதூகலம்
அளிப்பது கோல்ட் ஸ்பாட்!




ஸ்...ஸ்...ஸ்...ஸ்...

ஆரஞ்சு மணம் துள்ளும் போதினிலே
அருஞ் சுவை வந்து பாயுது காதினிலே




® ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்.
ஆரஞ்சு சுவை மணக்கும்
'கோல்ட் ஸ்பாட்' அனுமதிக்கப்பட்ட
மணமும் காப்பு இரசாயனங்களும்
அடங்கியது.

1. சிவசஸ்தானத்துக் கிணற்றடியில்.

2. தரிசனத்தில் இன்புறும் பக்த கோடிகள்.

3. பெரியவாள் அவதரித்த விழுப்புரம் வீடு.

4. மாணவர் ஸ்வாமிநாத னுக.

5. திண்டிவனத்தில் பயின்ற பள்ளி.

6. சிவாஸ்தான திருக் குளம்.

7. பள்ளி நாளில் ஆசிரியர், மாணவர் குழாத்துடன் ஆசாரியர்.

# தவத்தோடிணைந்த தலங்கள் 1

# அக்கோசிட்

## ஏசிசி யின் அமில எதிர்ப்பு சிமெண்ட்

### அமிலங்கள் மற்றும் அரிக்கும் இரசாயனங்களிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.




அக்கோசிட்—அமில எதிர்ப்பு செங்கற்கள், ஓடுகள் அல்லது அமில சேமிப்புத் தொட்டிகள் மற்றும் பிக்லிங் தொட்டிகள் கட்டுவதற்கான அமில எதிர்ப்பு இயற்கை படிவங்கள், கிரீமைத் தொட்டிகள், அமில கூண்டுகள், புகை போக்கிகள், அமில எதிர்ப்பு தொழிற்சாலை தள வரிசைகள், ஆராய்ச்சிக்கூட மேஜை மேல் தளங்கள், இரசாயன தொழிற்சாலைகள், துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஆகியவற்றில் இணைப்பு வேலைகளுக்கு சிபாரிசு செய்யப்படுகிறது.

ஹைட்ரோப்ளோரிக் அமிலம் தவிர்த்து இதர சக்தி வாய்ந்த எல்லா அமிலங்களுக்கும் மிகச் சிறப்பான எதிர்ப்புத் தன்மையும், அதிக இறுகும் தன்மையும் கொண்ட ஏசிசி யின் ஒப்புயர்வற்ற அமில பாதுகாப்பு சிமெண்ட் அக்கோசிட், பல காலமாகத் திறமையாக வரும் அக்கோசிட் இரசாயன தொழிற்சாலைகள் மற்றும் அவை சார்பான கட்டடங்களுக்கு மிகவும் ஏற்றது.

**ஏசிசி**
தரமான
தயாரிப்புகளுக்கு
நம்பகமான
உத்தரவாதம்

தயாராக கிடைக்கும் இடம்:
தி சிமெண்ட் மார்க்கெட்டிங் டிவிஷன் ஆஃப்
தி அஸோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.
அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்கள்,

**தி அஸோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.**

ENSB.ACC. 264.TAM

# கல்கி

ஆனந்த வைகாசி 19 — ஜூன் 2, 1974

## காஞ்சி முனிவர் எண்பதாண்டு சிறப்பிதழ்

- ☐ புகைப்பட மடல்கள்
- ☐ விசேஷக் கட்டுரைகள்
- ☐ ரசமான வாழ்க்கைச் சம்பவங்கள்
- ☐ அட்டைப்படம் : ஜே. சடகோபன்

★





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

# யூகோ பாங்கில்

# இப்பொழுது உங்கள் ஃபிக்ஸெட் டிபாஸிட் 9% க்கு மேலாக பயனுடைய வட்டி பெறுகிறது

ரெக்கரிங் டிபாஸிட்டுடன்
ஃபிக்ஸெட் டிபாஸிட்டை
இணைப்பது மூலம்!

மற்ற விவரங்களுக்கு
உங்கள் அருகிலுள்ள
யூகோபாங்க் கிளையுடன்
தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே
தங்களுக்கு
உதவ மக்களுக்கு
லாபகரமாக
உதவுகிறது

**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**




UCOC-19 TAM

கல்கி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

மலர் 33 -- இதழ் 44

# எண்தைக்கு எண்பது

'பெரியவர்கள்' என்று சொன்ன மாத்திரத்தில் இன்று மக்கள் அனைவரும் நினைவு கொண்டு வணங்கும் தனிப் பெருமை கொண்ட ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரியர்கள் இந்த வைகாசி அநுஷ நன்னாளன்று எண்பதாண்டு நிறைகிறார்கள். அநுபூதியாலும் அநுஷ்டானத்தாலும், அன்பாலும், அநுக்கிரக சக்தியாலும், அறிவாலும், அடக்கத்தாலும் மிகமிகப் பெரியவர்களான அவர்கள் வயதாலும் மேலும் மேலும் பெரியவர்களாவதில் மகிழ்ந்து ஜயந்தி கொண்டாடுகிற பாக்கியத்தை நமக்கு அருளி வருகிறார்கள். இகவாழ்விலும் அகவாழ்விலும் நம்மைக் கைதூக்கிக் காத்து வரும் அம்மையப்பனை அவர்களைப் போல நமது நன்றிக்கும் நமஸ்காரத்துக்கும் உரியவர் எவருண்டு? புண்ணியப் பெருநாளில் அந்த நடமாடும் தெய்வத்தை நமது உடலணு ஒவ்வொன்றிலும் அன்பு செறிந்த நன்றி துளும்ப நமஸ்கரிக்கிறோம்.

* * *

நாமும்தான் வாழ்க்கை நடத்துகிறோம்; அவர்களும்தான் எண்பது ஆண்டுகள் வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள். ஆனால் எத்தனை வித்தியாசம்? நாம் எங்கோ அதள பாதாளத்தில் நிற்கிறோம்; அவர்களோ கௌரிசங்கரச் சிகரமாக ஓங்கி நின்று அச்சிகரத்தில் தமது சீலத்தால் தர்மத்துக்கும் சத்தியத்துக்கும் கருணைக்கும் ஜயக்கொடி நாட்டியிருக்கிறார்கள். நாம் நமக்காகவே வாழ்ந்து கொள்கிறோம்; உண்மையான 'நான்' என்பதைத் தினையளவும் உணராமலே! புலன்களையே 'நானாக' எண்ணி மயங்கி இந்திரிய சுகத்துக்கே வாழ்கிறோம். இதன் பொருட்டுப் பிறருக்கு இன்னல் தரவும் தயங்காத நமக்குப் பரநலனுக்காகத் தியாகம் செய்வது என்ன என்பது சற்றும் தெரியாத விஷயம். 'நமக்கு' என்றே ஓயாமல் இப்படிப் பாடுபட்டும் திருப்தி கண்டோமா, நிறைவு கண்டோமா, அமைதி கண்டோமா? அதுதான் இல்லவே இல்லை. ஆனால் பெரியவர்கள் எப்படி வாழ்கிறார்கள்? அங்கு சொந்த நலனும், அற்பப் புலனும் அடியோடு அடிபட்டுப் போன விஷயங்கள். பூதக் கண்ணாடி கொண்டு சோதித்தாலும் இம்மிகூட மாசு மறு சொல்லவொண்ணாத நீண்ட நெடிய இதிஹாஸ வாழ்க்கையை ஒவ்வொரு கணமும் பிறருக்கெனவே வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்களுக்குப் 'பிறர்' யார்? தனக்கென ஏதுமேயற்ற தியாகத் திருமூர்த்தியானதால் உண்மையான 'நான்' எதுவோ அதுவாக, அதாவது ஆத்மாவாக, பிரம்மமாக, 'பிறர்' என்பதே அற்ற அனைத்துமாக ஆகியிருக்கிறார்கள். திருப்திக்கும் நிறைவுக்கும் சாந்தத்துக்கும் இருப்பிடமாக அலை எழா ஆழ்கடலாகப் பூரித்து விளங்குகிறார்கள்.

* * *

அந்த வாழ்க்கை அமைந்த அழகே அழகு! சமயச் சக்கரவர்த்தியாக ஒரு பேரரசை ஆள வேண்டிய பீடாதிபத்தியம் அவர்களுக்கு வாய்த்த போது அவர்கள் பதின்மூன்று வயதுப் பாலகன்தான். மிஷனரி பள்ளியில் படித்து வந்த குழந்தை திடுமென ஓரே இரவில் ஜகத்குருவாகிவிட்டது! அப்போது அவருக்கு வேத வித்யைகளிலோ பரிசயமே கிடையாது. பாபெரும் பட நிருவாகமோ நிச்சயம் ஒரு சிறுவனால் இயலாத பணி. அப்படியிருந்தும் தீர்க்க தரிசனம் வாய்ந்த முந்தைய பீடாதிபதிகள் இவரது உள்ளார்ந்த மகிமையை உணர்ந்து இவரையே வாரிசாக்கிவிட்டு மறைந்தார்கள். ஸ்தூலமாக வழிகாட்ட குருவுமின்றி நின்றார் பால ஜகத்குரு. சங்கராசாரியர்களாகிவிட்டோமே என்று அப்போது அவர் சிறிதுகூட இறுமாப்புறவில்லை. பெரும் பொறுப்பு வந்ததே என்று எண்ணியவுடன் அடங்கி ஒடுங்கிப் பராசக்தியிடம் அப்படியே தஞ்சம் புகுந்தார். அந்த அடக்கமே அவரை அமரருள் உய்த்துவிட்டது. காமகோடி பீடத்தின் அதி தேவதையான காமாக்ஷி குழந்தைக் குருநாதனை அள்ளி எடுத்துக்

கொண்டு தன்மயமாக்கி விட்டாள். இவரைப் போல மடத்தை நிர்வகிக்கும் திறனோ, வேத வித்யா பாண்டித்யமோ, இதர கலை ஞானமோ, இவற்றுக்கெல்லாம் மேம்பட்ட ஸ்வாநுபூதி மயமான பக்தியோ, ஞானமோ, சகல மக்களிடமும் சமமாகப் பொங்கிப் பெருகும் அநுக்கிரக சக்தியோ வேறெங்குமே காண்பதற்கில்லை என்று நானிலம் நவிலுமாறு அனைத்திலும் பெரிய ஆசாரிய ரத்தினமாக அவர்களைப் பட்டை தீட்டிவிட்டாள் அன்னை பராசக்தி. அவர்களையே இன்று மெய்யடியார்கள் ஆதி பராசக்தியின் அவதாரமாக உன்னி உணர்ந்திருந்தபோதிலும் அவர்களோ தம்மை எளியரில் எளிய மானுடராகவே சொல்லிக் கொள்கிறார்கள். நம் தோஷங்களை உணர்ந்து அடக்கத்துடன் பிரார்த்திக்க அறியாத நம் பொருட்டே, தம்மைத் தோஷங்கள் உள்ளவராகவும், அவை விலகுவதற்குக் காமாக்ஷியைத் தாம் வேண்டி முறையிடுவதாகவும் அவர்கள் பேசுகிறார்கள்! இந்த உண்மையைத்தான் அவர்கள் நகைச் சுவை கமழ, 'என்னை ஜகத்குரு என்கிறீர்கள். சிஷ்யனின் தோஷம் குருவைச் சேரும் என்பது சாஸ்திரம். நான் ஜகத்குருவானால் உலகிலுள்ள அத்தனை தோஷமும் என்னைத்தான் சேரும்' என்றார்கள். பிறிதொரு சமயம், இதய அந்தரங்கத்திலிருந்து சொன்னார்கள்: 'நீங்கள் எல்லாரும் என் அங்கங்கள். எனவே என்னை நான் திருத்திக் கொண்டு விட்டால், உடனே நீங்கள் எல்லோரும் தானாகவே ('ஆடோமாடிக்'காக) திருந்தி விடுவீர்கள்' என்றார்கள். இப்படி அழுக்கு மயமான நம்மை ஸ்படிகமான அவர்கள் தம்மோடு இசைத்துப் பேச எத்துணை கருணை இருக்க வேண்டும்?

இந்தக் கருணையும் அத்வைத பரமாசாரியர்களின் விஷயத்தில் பராசக்தி நிகழ்த்தும் ஒரு புதிர்தான். அத்வைதத்தில் தனக்கு வெளியே ஜீவராசி ஏது, அவர்களின் பாவம் ஏது, அதற்குப் பரிகாரம் தேடும் பரிவு ஏது? என்றாலும் இங்கோ அத்வைத மூர்த்தியே அனவரத அநுக்கிரக மூர்த்தியாயுள்ளது. ஒன்றான அத்வைதத்திலேயே ஊன்றியிருந்து கொண்டும், பலப் பலவான மனப் போக்குகளை அறிந்து அதற்கு ஏற்ற வெவ்வேறு வழிகளைக் காட்டிச் செம்மை செய்கிறார்கள். அவர்களது அத்வைதத்திலேயே வெவ்வேறு வழிகளும் அடங்கி விடுகின்றன. நமது நாட்டின் மற்ற மூன்று மாபெரும் சம்பிரதாயங்களான த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் இவற்றின் ஆசாரிய மகாபுருஷர்கள் அத்வைத வேந்தரை வாழ்த்தி அணிந்துரைகள் வழங்குவதைப் பெரும்பேறாகக் கருதுகிறோம். கிறிஸ்துவ, இஸ்லாமிய சமயத்தினரும் பெரியவர்களைத் தத்தம் சமய லட்சியமாகக் கண்டதற்கு இவ்விதழ் அத்தாட்சி பகருகிறது! பூஜ்ய பெஜாவர் ஸ்வாமிகளின் கட்டுரை அடுத்த இதழில் பிரசுரமாகிறது.

* * *

செயற்கரிய செய்வரே பெரியர் என்பது தமிழ் மறை. இதற்கேற்ப **செயல் உருவில்** சமய உணர்ச்சி செழிக்க நம் பெரியவர்கள் செய்துள்ள சாதனை பிரமிப்பூட்டுவதாகும்: வேத, வேதாந்த, வேதாங்கங்களில் தொடங்கி துரௌபதியம்மன் கோயில் பூசாரியின் அரவான் பாட்டு வரையில் சமய விஷயமான அனைத்துக் கலைகளும் இன்று புத்துயிர் கொண்டிருப்பதற்கும், எங்கு பார்த்தாலும் கோயில் கும்பாபிஷேகங்களும், கோலாகல பூஜைகளும், யாக யக்ஞங்களும், புராணப் பிரவசனங்களும் வைபவமாக நடப்பதற்கும் மூல வேர் பெரியவர்கள்தாமே? - 1957 முடிவில் அவர்கள் எழுந்தருளுமுன் இருந்த சென்னைக்கும் 1960 தொடக்கத்தில் அவர்கள் விடை கொண்ட பின் இருந்த சென்னைக்கும் இடையே இருந்த அஜகஜாந்தரமான வேறுபாடு ஒன்றே இந்தத் தனியொருவரின் ஆத்ம சக்திக்கு அற்புதச் சான்றுதானே? செயற்கரிய செய்தோரில் அவரினும் பெரியவர்கள்யார்?

* * *

இன்று பெரும்பாலும் செயலற்றுச் சிவமாக விளங்குகிறார்கள் கச்சி சிவாஸ்தானத்திலே! மடாதிபத்தியம் என்பதாக வெளியே தெரிகிற பதவியும் அந்தஸ்தும், அதற்குரிய சின்னங்களும்கூட இல்லை. பீடமில்லை. அறுபதாண்டுகளுக்கு மேல் உருகிக் கரைந்து ஆராதித்த பீடத்து உபாஸனா மூர்த்திகளும் இல்லை. ஆனால் இவை ஏதும் இல்லாத குறையும் இல்லவே இல்லை. ஏனெனில் அவர்களே நிறைந்த நிறைவாக, அகண்ட பரிபூரணமாக விளங்குகிறார்கள். மடமும், பீடமும், பீடத்து அதிதேவதைகளும் தாமேயாகி, இக்கலி உலகுக்குக் கிடைக்கத் தகாத மகா சொத்தாக விளங்குகிறார்கள். நம்மை வாழ வைக்கவே வந்தவர்கள் இன்று செயற்படாவிடினும், செயலினும் சக்தி வாய்ந்த சிந்தனையால் இன்றும் நம்மை வாழ்த்திக் கொண்டேதான் இருக்கிறார்கள்.

அன்பு தரும் ஸ்வாதீனத்தால் நாமும் அவர்களுக்கு வாழி கூறுகிறோம், ஜயந்தித் திருநாளன்று. 'எம்மை வாழ்விக்கவே வாழ்க நீ எம்மான்' என்று அவர்களை வணங்கிப் பிரார்த்திக்கிறோம்.

# காந்திஜி இருந்தால் கண்ணீர் வடிப்பார்!

அணு ஆயுத உற்பத்தியையும் சோதனைகளையும் கைவிடுமாறு உலகத் தலைவர்களுக்கு உணர்த்த ராஜாஜியை அனுப்பி வைத்தார் நேருஜி. கென்னடியையும் போப்பாண்டவரையும் வேறு பல தலைவர்களையும் காந்தி சமாதான நிறுவனத்தின் சார்பில் ராஜாஜி சந்தித்துப் பேசி விட்டுத் திரும்பிய போது இந்தியாவின் கௌரவம் உலக அரங்கில் ஓர் உச்ச கட்டத்தில் இருந்தது.

இன்று இந்திரா அரசு அணு வெடிச் சோதனையை நடத்தியதன் காரணமாக அதே கௌரவம் அதள பாதாளத்தை நோக்கிச்

சரிந்து கொண்டிருக்கிறது. அணுகுண்டு தயாரிக்கும் ஆற்றல் நமக்கு இருக்கிறது என்று நிரூபித்தது நமது விஞ்ஞானிகளுக்கு வெற்றியாக இருக்கலாம்; ஆனால் அது பாரதத்துக்குப் படுதோல்வியாக முடிந்திருக்கிறது. நமது நாட்டின் தார்மீகச் செல்வாக்கு மிக மிகத் தாழ்ந்து போயிற்று.

அமைதிப் பணிக்குத்தான் இந்த அணு வெடிச் சோதனை பயனாகும் என்று என்னதான் இந்திரா அம்மையார் கரடியாகக் கத்தினாலும் உலகம் இனி நம்மைச் சந்தேகக் கண்கொண்டுதான் பார்க்கும்.

இந்தச் சோதனை ருஷ்ய பாணியில் பரம ரகசியமாகக் காக்கப்பட்டு வெற்றி கிட்டிய பின்னரே அறிவிக்கப்பட்டது. ராணுவ உயர் அதிகாரிகள் சோதனையின்போது உடனிருந்திருக்கிறார்கள். பாகிஸ்தான் எல்லையிலிருந்து 150 கிலோமீட்டர் தூரத்துக்குள் சோதனை நிகழ்ந்திருக்கிறது. இதன் வெற்றிக்கு முக்கிய காரணகர்த்தாவான விஞ்ஞானி டாக்டர் ராமண்ணா பாதுகாப்பு அமைச்சருக்கு ஆலோசகராகப் பதவி ஏற்குமாறு கோரப்பட்டார். லண்டனில் ஓர் இந்திய உயர் அதிகாரி எதிர்காலத்தில் இந்தச் சாதனை அணுகுண்டு தயாரிப்புக்குப் பயனாகாது என்று உறுதி கூறுவதற்கில்லை என்று அப்பட்டமாகவே திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

இவையெல்லாம் சந்தேகப் பேயை உசுப்பிவிடுகிற காரியங்கள். விளைவு பயங்கரமாக இருக்கக் கூடும்.

ஏற்கெனவே அணுகுண்டுகளும் அவற்றை ஏந்திச் செல்ல ஏவு கணைகளும் உடைய செஞ்சீனா ஆயுதக் குவிப்பு நடவடிக்கையில்-தீவிரம் காட்டலாம். பாகிஸ்தான் ஆயுத உதவிகள் பெறும் முயற்சியில் முன்னைக் காட்டிலும் முழுமூச்சுடன் முனையும். பாக் பிரதிநிதிகள் இதற்குள்ளாகவே வாஷிங்டனுக்கும் ஜெனிவாவுக்கும் பறக்க ஆரம்பித்து விட்டார்கள். அணு ஆயுத உதவி வேண்டும் என்று பாகிஸ்தான் கேட்டுப் பெற்றாலும் வியப்பதற்கில்லை. நமக்கு அண்மையில் உள்ள டைகோ கார்ஸியா அமெரிக்க ராணுவத் தளம் அணு ஆயுதத் தளமாக மாறினால் நாம் எதிர்ப்புத் தெரிவிக்க அருகதையற்றவர்களாவோம். இந்த ஆயுதக் குவிப்புச் சூழலுக்கு மத்தியில் நாமும் மேன்மேலும் ராணுவ முஸ்திப்புகளைச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாவோம். அதே சமயம் அயல் நாட்டுப் பொருளாதார உதவிகள் நமது விவேகமற்ற அணுச் சோதனையால் பாதிக்கப் படக்கூடிய ஆபத்தும் இருக்கிறது. மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் இந்தியப் பொருளாதாரத்தின் கதி என்னவாகும்? சொல்லத் தேவையில்லை!

உலக நாடுகளிடையே நமது மதிப்பு போய் விட்டது. ஜப்பான், ஸ்வீடன் போன்ற உற்ற நண்பர்களும் இடித்துரைத்துக் கொண்டிருக்கிறார்கள். அணு ஆராய்ச்சித் துறையில் அளித்து வந்த ஒத்துழைப்பைக் கனடா நிறுத்தி விட்டது. அமைதிப் பணிக்கு அணு வெடிச் சோதனை என்பது அபத்தம் என்று அது அடித்துக் கூறிவிட்டது. செப்பனிடப் பட்டு வரும் நட்புறவில் மீண்டும் முறிவு காண விரும்பாத அமெரிக்கா, அதிகக் கூச்சல் எழுப்பாததில் வியப்பில்லை. ஆனால் பாகிஸ்தான் அமைச்சரை நிக்ஸன் உடனடியாகச் சந்திக்க ஒப்புக்கொண்டது நமக்கு எதிராகப் பக்கம் பக்கமாகப் பேசுகிறது!

நாட்டுப் பொருளாதாரம் குட்டிச்சுவராகிக் கொண்டிருக்கும்போது இந்த அணுச் சோதனை மக்களுக்கு ஊக்கமளிக்கும் என்று சில அறிமேதாவிகள் நினைக்கின்றனர். நமக்கு மிக அண்மையில் அணு ஆயுதக் குவிப்பு நடவடிக்கை அதி தீவிரம் அடையுமோ என்ற பயத்தில் சதா வாழ்ந்து கொண்டிருப்பதில் ஊக்கம் பெற என்ன இருக்கிறது? இன்றோ நாளையோ என்றுள்ள தேசப் பொருளாதாரம், 162 கோடி ரூபாய் செலவில் அணுவெடிச் சோதனை நடத்துவதால், வாலிப மிடுக்குடன் துள்ளிக் குதிக்க ஆரம்பித்துவிடுமா?

ஆக்கபூர்வமான விஷயங்களுக்கு அணு வெடிகளைப் பயன்படுத்துதல் என்ற அம்சம் அமெரிக்காவிலும் ருஷ்யாவிலும்கூடப் பரிசோதனைக் கட்டத்தில்தான் இருக்கிறது என்னும்போது ஏழை இந்தியாவுக்கு என்ன அவசரம் நேர்ந்தது? கட்டுக்கடங்காத செலவும் அளக்க இயலாத ஆபத்தும் மிகுந்த துறை ஆயிற்றே இது.

அமைதிப் பணிக்கு என்பதை ஒப்புக்கொள்வதானாலும் சோதனை நடத்தப்பட்ட முறையும் சந்தர்ப்பமும் சிறிதும் சரியல்ல. எந்த விதமாகப் பார்த்தாலும் இது இந்திரா அரசின் மற்றோர் அசட்டுத்தனமே.

# என்ன சேதி?

## முதல்வருக்கு இரண்டு ஜே!

மக்களின் நலனில் அக்கறை கொண்ட எந்த ஓர் அரசும் உடுக்க உடை, உண்ண உணவு, இருக்க இடம் என்ற அடிப்படைத் தேவைகளுக்கு அப்பால் கவனிக்க வேண்டிய நான்காவது முக்கிய அம்சம் பிணி தீர்க்கும் நற்பணி. இந்த நான்காவது அம்சத்தை மனத்தில் கொண்டு சென்னையில் நான்கு புதிய மருத்துவ மனைகளைக் கட்டத் திட்டமிட்டுள்ள தி.மு.க. அரசை மனமாரப் பாராட்டுகிறோம்.

வட சென்னையிலும் தென் சென்னையிலும் அமையவிருக்கும் இவை ஒவ்வொன்றும் நூறு கட்டில்களைக் கொண்டதாய் இருக்கும். இப்புதிய மருத்துவ மனைகளைக் கட்டுவதற்கு முன்னர், மருத்துவ மனைகள் அமைப்பில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை மனத்தில் கொண்டு நவீன முறையில் சிந்திப்பது அவசியம். அதோடு கூவம் நாற்றம் போன்ற ஊழல்களும் கான்பூர் கன்ருவி போன்ற துயரங்களும் நேராமல் காக்கவும் வேண்டும்.

**ராஜாஜி சிந்தனை**

எல்லாம் மிகவும் அற்புதம். வெகுதூரத்தில் போடும் சத்தம் இங்கே வந்து சேருவதும் யந்திரத்தால் ஆகாயத்தை மடக்கி ஆளுவதும், எல்லாம் பெரிய வெற்றியே. ஆனால் பயன் என்ன? போடும் சப்தம், கேட்கும் பேச்சு, பாடும் பாட்டு இவை நல்லவையானால் பயன் உண்டு. கழுதைகள் எங்கிருந்து கத்தினாலும் ஒன்றே. கிராமத்தில் மேயும் கழுதையானால் என்ன, சீமையில் கத்தும் கழுதையானாலென்ன? கட்டை வண்டிக்குப் பதில் ரயிலும் மோட்டாரும் வந்து திருடர்களையும் மோசக்காரர்களையும் ஊரில் வேகமாய்க் கொண்டு வந்து தள்ளுவதாயிருந்தால் ''வேண்டாமப்பா, கட்டை வண்டியே போதும்'' என்போம். வெகு தூரத்தில் பேசும் பேச்சு நமக்கு நன்மையும், சுகமும், நல்லறிவும் தருவனவாக இருந்தால் ரேடியோ பயன் தரும்.

முதல்வருக்கு நாம் போடும் இரண்டாவது ஜே உதக மண்டலத்துக்கு ரயில் போக்குவரத்தை நிறுத்தலாகாது என்று கூறியிருப்பதற்காக. மத்திய அரசின் ஆளுகைக்குட்பட்ட ரயில் போக்குவரத்தின் இந்தப் பகுதியை மாநில அரசிடம் ஒப்படைத்து விடலாம் என்று முதல்வர் கூறியிருப்பதை ஒருபோதும் நாம் ஒப்புக்கொள்ள இயலாது என்றாலும் ஆறு மாதங்களாக இந்த மேட்டுப்பாளையம் — ஊட்டி ரயில் ஓடாமல் இருப்பது வெட்கக்கேடு என்பதில் ஐயமில்லை. எத்தனையோ அரசுத் துறைத் தொழிலகங்கள் கோடிக் கணக்கில் நஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதைப் பற்றிக் கவலைப்படாத மத்திய அரசு இந்த ரயில் போக்குவரத்தை லாபகரமாக இயங்கவில்லை என்பதற்காக நிறுத்தி வைத்துள்ளது அபத்தம்.

இயற்கை அன்னையின் சௌந்தரியங்களை மக்கள் ரசித்து இன்புற வசதி செய்யுமிடத்தில் லாப நஷ்டக் கணக்குப் பார்க்கத் தான் வேண்டுமா? அழகுணர்ச்சி என்பது ரயில் மந்திரிக்கு அறவே கிடையாதா?

பெட்ரோல் விலை ஏற்றத்தால் மலை வாசஸ் தலங்களுக்குக் கார்களில் போகிறவர்கள் கூட மிகவும் குறைந்து போய்விட்டனர். மலைப் பாதைகளில் பஸ்ஸில் செல்லும்போது பலருக்குத் தலை சுற்றும். இந்நிலையில் பெரியவர்களுக்கும் வாலிப வயதினருக்கும் குழந்தைகளுக்கும் ஒரேபோலக் குதூகலம் அளிப்பதான இந்த ரயில் போக்குவரத்தைக் கண்டிப்பாக நடத்தியே தீர வேண்டும். இந்த விதமாக மத்திய அரசை வற்புறுத்துவதுடன் முதல்வர் நிற்க வேண்டும். இப்பகுதி ரயில் போக்குவரத்தை எங்களிடம் ஒப்படையுங்கள் என்று கூறுவது வீண் சந்தேகங்களுக்கு இடமளிக்கும்.

## இரண்டு பக்கமும் இடி!

காகிதத் தட்டுப்பாடு காரணமாகப் பத்திரிகைகளுக்கு நேர்ந்துள்ள சொல்லி முடியாத கஷ்ட நஷ்டங்கள் விளம்பரத் துறையையும் பாதித்துள்ளன. மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி என்பது போல் தொழில் துறையில் இன்றுள்ள தேக்க நிலையும் விளம்பரத் துறையை வெகுவாகப் பாதித்துள்ளது. பலப்பல விளம்பர ஏஜன்ஸி நிறுவனங்கள் ஆட்குறைப்பு நடவடிக்கை கூட மேற்கொண்டுள்ளன.



இத்தகைய ஒரு சிக்கலான சூழலில் இந்திய விளம்பர ஏஜன்ஸிகள் சங்கத்தின் நடப்பு ஆண்டுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் ஸ்ரீ பிரஸந்த சன்யால். இவர் க்ளாரியன் மக்கேன் விளம்பர ஏஜன்ஸியின் மானேஜிங் டைரக்டர். அவர் பதவிக் காலத்தில் இந்திய விளம்பரத் துறை தான் எதிர்கொள்ள வேண்டியுள்ள பல பிரச்னைகளையும் வெற்றிகரமாகச் சமாளிக்க வாழ்த்துவோம்.

## தமிழகத்துக்குத் தலைகுனிவு!

இது மத்திய அரசின் ரெவின்யூ மந்திரி திரு கே. ஆர். கணேஷின் கூற்று:

''கடந்த மூன்று ஆண்டுகளாக நூறு ரூபாய் பத்து ரூபாய் போலி நோட்டுகளின் செலாவணியில் தமிழகமே முதலிடம் பெற்றிருக்கிறது. 1971ம் ஆண்டில் 98,600 ரூபாய்கள், 1972ம் ஆண்டில் 67,600 ரூபாய்கள், 1973ம் ஆண்டில் 1,24,000 ரூபாய்கள் என்று இங்கே போலி நோட்டுச் செலாவணி ஆகியிருக்கிறது. 1971ல் ஆந்திரா, 1972ல் கேரளம், 1973ல் ஒரிஸ்ஸா ஆகியவை இரண்டாவது இடம் பெற்றிருக்கின்றன.''

இந்தப் போலிப் பண நடமாட்டத்தில் தங்கள் கைவரிசையைக் காட்டிக் குற்றம் இழைத்தவர்களின் எண்ணிக்கையிலும் தமிழகம் முதலிடம் பெற்றிருக்கிறது.

தமிழகத்தின் சாதனைப் பட்டியலில் இதையும் சேர்த்து விடாமல் தக்க நடவடிக்கை எடுத்து இந்தத் தீமையை ஒழிப்பதில் தமிழக அரசு முதன்மைபெற வேண்டும்.

## அருமறை ஆலய ஆண்டு விழா

தென் இந்தியாவில், அல்லது ஒருகால் அகில இந்தியாவிலுமே, மிகப் புராதனமான மறை நிலையமாக விளங்குவது கும்பகோணத்தில் உள்ள ராஜா வேத பாடசாலை. நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட இப்பாடசாலையை நிறுவியவர் தஞ்சை நாயக மன்னர் மூவரின் மதியமைச்சராக விளங்கிய மகான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் ஆவர். இவ

ருக்கு 'அத்வைத வித்யாசாரியர்' என்ற விருதும் உண்டானபடியால், அத்வைத ஆசாரியரான ஸ்ரீ ஆதிசங்கரரின் ஜயந்தி யன்றே இவரது நிறைநாளும் ராஜா வேத பாடசாலையில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. தலைமை தாங்கிய ஸ்ரீ கோனேரி ராஜபுரம் ராமசுவாமி அய்யரும், மற்றப் பேச்சாளர்களும், நடுவில் மங்கியிருந்த இந்த அருமறை ஆலயம் மீண்டும் புதுப் பொலிவு பெற்றிருப்பதற்குக் காரணஸ்த ரான நிர்வாகத் தலைவர் ஸ்ரீ வி. ஆர். லக்ஷ்மிகாந்த சர்மாவை மனமாரப் பாராட் டினர். ''ராஜா'' பாடசாலை, பாடசாலை களின் ராஜாவாகத் திகழ நாமும் வாழ்த்து கிறோம்.

## கம்சனும் தோற்றான்!

இஸ்ரேல் நாட்டு யூதர்களுக்கும் பாலஸ் தீன அராபியர்களுக்குமுள்ள பகையில் ஒரு பாவமும் அறியாத பன்னிரண்டு முதல் பதி னைந்து வயதுக்குட்பட்ட குழந்தைகள் பதி னாறு பேர் சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி உலகையே நிடுக்கிட வைத்தது. உலகத் தலை வர்களின் கண்டனத்துக்குப் பாலஸ்தீனக் கொரில்லாக்கள் ஆளாகி யிருக்கின்றனர்.

விடுமுறையைக் கழிக்க ஒரு கிராமத்துக்கு வந்து, ஒரு பள்ளியில் தூங்கிக் கொண்டிருந் தன 85 குழந்தைகள். இந்த இஸ்ரேலியப் பாலகர்களை மூன்று துப்பாக்கி ஏந்திய பாலஸ் தீனக் கொரில்லாக்கள் சூழ்ந்து கொண்டு, இஸ்ரேல் சிறையிலுள்ள தங்கள் சகாக்கள் 23 பேரை மாலை ஆறு மணிக்குள் விடுதலை செய்தால்தானாயிற்று, இல்லையேல் குழந்தை களைச் சுட்டுக் கொன்றுவிடப் போகிறோம் என்பதாக மிரட்டினார்கள். இஸ்ரேல் அர சாங்கமும் அந்த 23 பேர்களின் அடை யாளங்களை விசாரித்துச் சொல்லும்படி கேட் டிருக்கிறது. மாலை ஐந்து மணி வரை இந்தப் பாலஸ்தீனக் கொரில்லாக்கள் தகவல் தர வில்லை. ஆறுமணி என்ற காலவரையைத் தள்ளிப் போடும்படி இஸ்ரேல் அரசாங்கம் கேட்டது. வெறி பிடித்த கொரில்லாக்கள் மறுத்தார்கள். எனவே, இஸ்ரேல் அரசாங் கம் மீட்கக் கூடிய குழந்தைகளையாவது மீட்போம் என்று தனது ராணுவப் படை யைச் செலுத்தியது. இதையறிந்த அந்த மூன்று அராபிய துப்பாக்கி ஏந்திய பாத கர்கள் நிரபராதிகளான 16 குழந்தைகளை ஈவு இரக்கமின்றிச் சுட்டுக்கொன்றுவிட்டனர்.

இந்தக் கொலை பாதகத்தை நடத்திய மூன்று பாதகர்களையும் இஸ்ரேல் கொன்று தீர்த்து விட்டதாகக் கூறுகிறது.

நாடுகளின் சண்டையில் நிரபராதிகளான பச்சிளங் குழந்தைகளைச் சுட்டுக் கொன்றது, அராபியர்களின் கௌரவத்தையும் செல் வாக்கையும் பெரிதும் பாதித்துள்ளது. உலக மக்களின் பெரு வெறுப்பை அராபிய கொரில் லாக்கள் சம்பாதித்துக் கொண்டு விட்டனர்.

எண்பத்தைந்து குழந்தைகளில் பதினாறு இறந்தாலும் மற்ற குழந்தைகளுக்குத் தக்க சமயத்தில் துணிகரமான நடவடிக்கை எடுத்து வாழ்வளித்த இஸ்ரேல் பிரதமர் திருமதி கோல்டாமியரை உலகம் பாராட்டுகிறது.



ஸர் பால் டைக்ஸ் என்ற பிரிட்டிஷ்காரர் 1958ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 26ம் தேதி இரவு 9 மணிக் குப் பெரியவாளைத் தரிசனம் செய்து அளவளாவினார். நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு ஸர் பால், பெரியவர்களை நோக்கி, ''மேல்நாட்டுக்குத் தாங்கள் அளிக்கும் செய்தி என்ன?'' என்று கேட்டார்.

பெரியவர்கள் கொஞ்ச நேரம் கண்களை மூடிக் கொண்டு மௌனமாக இருந்தார்கள். கடைசியில் மெள்ள மெல்லிய குரலில் பின்வரும் மொழிகளை அளந்து கூறினார்கள்.

## மேல்நாட்டவருக்கு ஒரு செய்தி!

''நீங்கள் எந்தப் பணியும் அன்பினால் உந்தப்பட்டுச்செய்வீர்களாக. எந்தப் பணியும் அடுத்தவனுக்கு மகிழ்ச்சியோ நன்மையோ பயக்குமா என்றே யோசித்துச் செய்ய வேண் டும். செய்யும் எப்பணியையும் அன்போடு செய்ய வேண்டும். நான் ஈண்டு காந்தியின் அஹிம்சா நெறியைக் குறிக்கவில்லை. கடுமை யான நடவடிக்கை எடுக்க வேண்டிய சந் தர்ப்பச் சூழ்நிலை உருவாகலாம். உதாரண மாகத் தண்டனை விதிக்க வேண்டிய அவசியம் நேரலாம். ஏன், யுத்தம் நடத்த வேண்டிய அவசியம்கூட நேரலாம். எந்தவித பணி யைச் செய்ய நேரிட்டாலும், அந்தப் பணி யைச் செய்பவன் அன்போடு, நன்மை பயக் கும் நோக்கில் செய்ய வேண்டும். ஆசை, வெறுப்பு, கோபம், பொறாமை முதலிய உணர்ச்சிகளை முற்றும் ஒழிக்க வேண்டும். அன்பே வாழ்க்கையை நடத்துவதற்குரிய குறிக்கோளாக அமைந்து விடின், உலகிலுள்ள பல துன்பங்கள் நீங்கிவிடும்.''

இப்படிச் சொல்லிவிட்டுக் கடைசியாக, ''இதைப் பாரத நாட்டு முனிவர்களும் ரிஷிகளும் விடுத்த செய்தியாக எடுத்துச் செல்லுங்கள்'' என்றார்!

பெரியவர்கள் தமது செய்தியாக அளிக்கவில்லை என்பதை உன்னிப் பார்க்க வேண்டும். அவர்க ளுடைய அடக்கம் யாருக்கு வரும்?

''அடக்கம் அமரருள் உய்க்கும்'' - வள்ளுவர்



# எஸ்ட்ரெலா சக்தி




இந்த சக்தி தரும் ஒலி உங்கள் காதுகளில் ரீங்காரம் செய்கிறது.

இந்த சக்தி தரும் ஒளியை நீங்கள் கண்ணெதிரே காணலாம்





**உங்கள் டிரான்ஸிஸ்டர் மற்றும் டார்ச்சில் எஸ்ட்ரெலா சக்தி காட்டும் அதிசயம் பாரீர்!**



**எஸ்ட்ரெலா** பாட்டரிகளின் சக்தி: குடத்தில் காவேரிபோல!

எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்–400 019.

CMEB-2-203

# எனக்கு முக்கியம் அம்பாள்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

எல்லா சாஸ்திரங்களும் முடிவில் ஞானம் அடைவதைத்தான் லட்சியமாகச் சொல்கின்றன. 'ஞானம்' என்றால் எதை அறிவது? தன்னையே அறிவதுதான் ஞானம். தன்னை அறிகிறபடி அறிந்து விடுகிறபோது, அந்தத் தானுக்கு வேறாக எதுவுமே இராது. ஸகலமும் அதற்குள் அடக்கம். ஆத்ம ஞானமே எல்லாவற்றையும் அறிகிற ஞானமாகிறது. நம் சரீரம், இந்திரியங்கள், மனசு எல்லாம் போன பிறகும் மாறாமல் நிற்கிற சத்தியமாக இருப்பது இந்த ஆத்மா. மற்றதெல்லாம் மாறினாலும் இது மாறாமலே உள்ளபடி இருந்து கொண்டிருப்பதால் இதற்கு 'ஸத்' என்று பெயர். இந்த 'ஸத்' வெறுமே இருந்து கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. தான் ஸத்தாக இருக்கிறோம் என்கிற அறிவு — ஞானம் — அநுபவம் — அதற்கு இருந்தால்தான் ஆனந்தம் உண்டாகிறது. இப்படித் தன்னையே தான் அறிந்து கொள்கிற போது 'ஸத்தா'னது 'சித்' எனப்படும். ஸத் என்கிற உண்மையை பிரம்மம் என்றும் பரமேசுவரன் என்றும், சித் என்கிற அதன் அறிவைப் பராசக்தி என்றும் அம்பாள் என்றும் சொல்கிறோம். பிரம்ம ஞான ஸ்வரூபமாக இருக்கிற அவளை உபாஸித்தாலே, அவளுடைய அநுக்கிரகத்தால் நாமும் அந்த ஸத்துத்தான் என்கிற ஞானத்தை அடைய முடியும். எப்போது பார்த்தாலும் சலித்துக் கொண்டும், மாறிக் கொண்டும், அழிந்து கொண்டும் இருக்கிற ஏதோ ஒன்றாக நம்மை எண்ணி வருகிறோமே, உண்மையில் இது அல்ல நாம், எப்போதும் மாறாமலிருக்கிற ஸத்தியமே நாம் என்கிற ஞானம் அநுபவ பூர்வமாக உண்டாகி, அதில் ஏற்படுகிற ஆனந்தமே மோக்ஷம். இகலோகத்தில் பல விதமான ஸௌக்கியங்களை அநுக்கிரகம் செய்கிற அம்பாள், முடிந்த முடிவாக, இந்த ஞானத்தை, மோக்ஷத்தை அருளுகிறாள். அவள் அநுக்கிரகத்தால்தான் ஜன்ம விடுதலையாகிய மோக்ஷம் அடையலாம். அம்பாளை ஆராதிப்பதால் ஞானம் ஆவிர்பாவமாகி அஞ்ஞானம் விலகி, மோக்ஷம் கிடைக்கிறது என்பது ஸௌந்தர்யலஹரி, மூகபஞ்சசதி, ஆர்யா த்விசதி எல்லாவற்றிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

அஞ்ஞானம்தான் பெரிய அழுக்கு. துணி அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. வீடு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. நம் மனசு அழுக்கு இல்லாமல் ஆக வேண்டும். அழுக்குப் போனால்தான் இதில் ஸத் வஸ்துவின் பிரகாசம், அழுக்குத் துடைத்த கண்ணாடியில் சூரியன் பிரகாசிக்கிற மாதிரி, பளீரென்று அடிக்கும்.

இப்படி நம் அழுக்கைக் கழுவிக் கொள்ள அம்பாளுடைய சரணாரவிந்த தியானம் தான் வழி. கொஞ்சம் கொஞ்சம் தியானம் செய்தாலே அதன் ருசி தெரியும் — அம்பாளுடைய சரண கமலத்தைக் காட்டிலும் சாந்தி அளிக்கக் கூடியது வேறு எதுவும் இல்லை என்று புரிய ஆரம்பிக்கும். விடாமல் இப்படித் தியானம் செய்தால் முடிவில் இந்த உடம்பு போன பின் செத்தும் சாகாதவராகலாம் — அமிருதமாகலாம். என்றும் நிலையாக இருக்கிற ஞானத்தில் இரண்டறக் கலந்து அமிருதமாகலாம்.

இப்படி எல்லாம் நான் உபதேசம் பண்ணுகிற நேரத்தைக்கூட, அவளுடைய தியானத்திலேயே செலவு செய்தால் — இன்னும் எத்தனையோ மடங்கு ஆத்ம சாந்தி கிடைக்கும். இப்படிப் பேசுகிற பொழுதை அவள் தியானத்தில் செலவிட்டால் என் தோஷங்கள் எத்தனையோ நீங்கும்; இதைக் கேட்கிற பொழுதை அவளுடைய தியானத்தில் செலவிட்டால் உங்கள் தோஷங்களும் எவ்வளவோ விலகும்.

இந்த உபந்நியாசமெல்லாம் உங்கள் திருப்திக்காக, தற்கால சாந்திக்காகவே, பண்ணுகிறேன்.

அதோடுகூட, உங்களுக்கு விஷயங்களை விளக்க ஆரம்பிக்கிற போதுதான், எனக்கே இந்த விஷயங்கள் தெளிவாகின்றன; அதனால் என் நினைவையும் சுத்தப்படுத்திக் கொள்கிறேன்.

எனக்கு முக்கியம் அம்பாள். அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத்தான் லோக க்ஷேமார்த்தம் தியானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். எப்போதெல்லாம் குறை தோன்றுகிறதோ அப்போது அம்பாளிடம் முறையிட்டு அந்தக் குறை யில்லாமலிருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். பிறத்தியாருக்கு உபதேசித்துத் திருத்துவதற்கு யத்தனம் செய்வதற்கு முன்னால் அவரவரும் தானே தப்புப் பண்ணாமல் இருந்தால் போதும். இதற்கு அவளுடைய சரண கமலம் தான் கதி. எளிதில் நம் குறையைப் போக்கிக் கொள்ளத் தியானம் என்கிற விசையை நமக்குள்ளேயே வைத்திருக்கிறாள். நீங்கள் எல்லோரும் உங்கள் ஆத்ம க்ஷேமத்துக்காகவும் லோக க்ஷேமத்துக்காகவும் அவளைத் தியானம் செய்ய வேண்டும். இதை எல்லோரும் விடாமல் செய்து கொண்டிருந்தாலே போதும். ஒருத்தருக்கும் ஒரு கஷ்டமும் வராது; ஸமஸ்தப்பிரபஞ்சமும் பரம க்ஷேமமாக இருந்து வரும்.



# பரப்பிரம்மம்



## ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

(காஞ்சி ஸ்ரீ தொண்டைமண்டல ஆதீனகர்த்தர்)

**த**மிழ் நாட்டிலே பல மடங்கள் இருக்கின்றன. அவற்றுள், சில மடங்களே விளக்கம் உடையன. அவற்றுள்ளும் ஒன்றே உலகெலாம் போற்றச் சிறந்து நிலவுகின்றது. அது எது?

காஞ்சிபுரம் ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீலஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்கள் வீற்றிருந்தருளும் தொன்மைத் திருமடமே ஆகும்.

அதில் அருட் செங்கோலாட்சி செய்தொளிரும் ஆசாரியர் இருவருள் பெரியவர்க்கும் பரப் பிரம்மத்திற்கும் வேறுபாடு யாதும் இல்லை. ''பாம்பு அறியும் பாம்பின் கால்'' என்னும் பழமொழிப்படி பிரமோபாசனை யில்லாதார் இவ்வுண்மையை உணர்வது அரிது.

குரு பேதம் பலவுண்டு. அவரெல்லோருள்ளும் ஞான குருவே மேலானவர். ஆசாரிய ஸ்வாமிகளை அறிந்தோர் பலரும் ஞான குருவையும் அக் குரு லட்சணத்தையும் நூல் வேண்டாமலே நன்கறிவர். மதி நுட்பமும் நூலறிவால் அதி நுட்பமும் உடையவர்க்கு இவ் வுண்மை தானாக விளங்குவதில் வியப்பொன்றும் இல்லை. ஆனால் இத்தகைய அருளிலே ஆர்வம் மிக்கார் மட்டுமின்றி உலகியல் வேட்கை உடையார்க்கும் ஆசாரிய ஸ்வாமிகளைக் கண்டு வழிபடும் நோக்கத்தில் குறைவில்லை. நோக்கத்தில் குறைவில்லாவிடினும் இவ்விரு சாராரிடையே காட்சியிற் குறை இருந்தே தீரும். ஓர் எடுத்துக்காட்டு:

இலங்கையிற் சென்று பிராட்டியைக் கண்ட சிறிய திருவடியைப் போல எல்லாரும் காண வல்லாரோ? சிறிய திருவடியாம் ஆஞ்சநேயரின் காட்சிக்குத் தோன்றியது பிராட்டி யன்று. 'இற்பிறப்பு', 'இரும்பொறை', 'கற்பெனும் பெயர்ப் பொருள்' மூன்றும் சீதை என்ற திருவுருவத்தில் களிநடம் புரியக் கண்டதன்றி நற்பெருந் தகைமைசான்ற ஒரு நங்கையை அநுமார் காணவில்லை என்று மகா கவி சொன்னார். அங்ஙனமே, காஞ்சியிலோ வேறு எவ்விடத்திலோ குரு தரிசனம் பெற்ற அருளியல் வேட்கையுற்ற— புண்ணியர் கண்ணினைக் காட்சியில் ஒரு மானுட உருவம் தெரியாது: அவர்க்குத் தெரிவன மானுடச் சட்டை தாங்கி வந்துள்ள ஜீவன் முக்தி லட்சணங்களே யன்றி வேறு இல்லை.

பொருளில் சற்றும் பற்றற்ற உண்மைத் துறவியாக விளங்குபவர் ஸ்ரீ ஸ்வாமிகள். உண்மைத் துறவோன் பொன்னை(பொருளை) விருப்போடு பார்த்தலும் தொடலும் கோடலும் செய்யான். இவ்விலக்கணம் யாம் அறிந்த அளவில் கண்கண்ட தெய்வம் என உலகம் போற்றும் ஆசாரிய ஸ்வாமிகள் பால் அமைந்துள்ளது. சில ஆண்டுகள் தென்னாட்டிலும் வட நாட்டிலும் நடமாடும் கடவுளாக திக்விஜயம் உற்றிருந்தார்கள். இப்போது காஞ்சியிலே தேனம்பாக்கத்திலே சிவாஸ்தானத்திலே நிஷ்டாநுபூதியை மட்டும் உற்றிருத்தலை யாவரும் அறிவர். அங்கு சென்று வழிபடும் அன்பர் செலுத்தும் பாத காணிக்கையை நோக்குதலும் இல்லை.

நாலைந்து ஆண்டுகள் முன்னர், கோவைத் திருவாளர் ம. ச. பழனியப்ப முதலியார், ஸ்வாமிகள் தரிசனம் கிடைக்கப்பெறும் பேரார்வத்தோடு குடும்பத்தையும் கூட்டிக் கொண்டு சென்று வணங்கிச் செலுத்திய பெரும் பொருளை அவர்கள் நோக்கவே யில்லை. நாம் அப்போது சந்நிதானத்திலே இருந்து கண்ட உண்மை இது. பொன்னைப் பாராமையும் தொடாமையும் கொள்ளாமையும் அதன் பெயரையும் கேளாமையும் துறவோர் குணங்கள் என்ற ஸ்மிருதியின் கருத்துக்கு ஒவ்வவே முற்றிலும் ஒழுகுகிறார் ஸ்ரீ ஸ்வாமிகள்.

தரிசனம் புரிய வரும் அன்பர் கூட்டம் சொல்லும் குறைகளைக் கேட்டு, அவர்பால் கொண்ட கருணைப் பெருக்கால், ஒன்றிரண்டு சொல்லால், எதிர்கால நிகழ்ச்சி அருளப்படும். அவற்றை

ஆழ்ந்து நினைத்தால் உயரிய பொருள் தோன்றும். எத்தனையோ முறை இவ் விதம் ஸ்வாமிகளின் வாக்கின் உட் பொருள் நமக்குத் தோன்றின.

சிறிது காலத்துக்கு முன் காஞ்சியிற் சென்று, மடத்தின் நீங்கிச் சமயப் பிர சாரம் செய்தல் வேண்டிச் சிந்தனை உண் டாயிற்று என்றேம். கேட்ட ஸ்வாமிகள் ஒரு நாழிகை மௌனமாக இருந்து, 'மடத்தினை விட்டு நீங்கிப் பல யாண் டாயின; பிரசாரத்தைத் தொடர்ந்து செய்தல் நாட்டுக்கு நல்லது' என்று திருவுளம் பற்றினர்கள். அவர்கள் கூறியவாறே பிற்பாடு நம் செயல் இயன்றது. பெரியோர் நினைப்பின் சிறப்பை யாராலும் அளவிடமுடியாது என்பதற்கு இஃது ஓர் உதாரணம்.

கல்வி, கேள்வி, ஆராய்ச்சி, தெளிவு, தெளிந்த வண்ணம் நிற்கும் பெருநிலை எல்லாவற்றுள்ளும் ஸ்வாமிகளை நிகர்த் தவர் அரியர். அவர்கள் கல்லாத கலை ஒன்றும் இல்லை. பிரத்தானத் திரயம் எனப்படும் பிரம சூத்திரம், உபநிட தம், பகவத்கீதை ஆகியவற்றை பாஷ் யத்தோடு சீடர்களுக்குப் பாடம் சொல் லிய அநுபவம் மிக்கவர்கள் ஆதலின், வடமொழிப் புலவர்களின் ஐயந்திரிபு தவிர்த்தலில் மிக்க வல்லவர்கள். புதுப் பெரியவரும் இவ்வாறே பெருங் கல்வி யுடையவராக இருத்தல் ஸ்வாமிகளது பேராற்றல் தரக் கிடைத்த அருட்பேறு.

சித்த சுத்தி, ஞான யோக நிட்டை, அத்யயனம், சந்நியாசம், ஆசாரம்,



வேத விதியை மனத்தாலும் கடவாமை இன்னேரன்ன தெய்வ சம்பத்துக்களை மக்கள் அடையச் செய்தற்கே மடங்கள் முதலிய நிறுவனங்கள் தோன்றின. அவற்றின் அவசியத்தை நோக்கி, அநுபவத்தில் இன்றும் இயங்கும் நல்ல தொரு மடம் காஞ்சியில் விளங்கு கின்றது. அத்தகு சீரிய மடத்தைப் பெருந் தகுதி மன்னியவரே பரி பாலனம் செய்ய வேண்டுமன்றோ! அதனை நீடு நினைந்து தேடிப் பெற்ற ஞான மூர்த்திமானுக்குரிய பொறுப் பாக்கிவிட்டு, பரமஹம்ஸ நிலையினராக ஒரு பற்றும் இல்லாமை மட்டும் புலப் பட ஒழுகி வரும் அளப்பரும் தவத் திருவாளர் ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள். அவர்கட்கு எண்பத்தோர் யாண்டுறுத லின் உலகம் பத்தி விசேடத்தால், மிக்கச் சிறப்புடன் குருவருள் பெற்றுய்ய விரைகின்றது. வேண்டுவோர் வேண்டு வதே ஈவான் இறைவன் (ஆசாரியன்). இறையன்பு (குரு பக்தி) எல்லா நலன் களையும் ஆக்கும். இக்காலத்தில் நாடு அடையுங் கேடு, மக்கள் படும் பாடு எல்லாம் குருவருள் பெற்றால் அன்றித் தீரா.

குருவருள் பெற்றுய்யும் விருப்புடை யர் அனைவர்க்கும் காஞ்சிப் பெரியவரை வாழ்த்தி வணங்கி வாழும் வாய்ப்பை நல்கும் நன்னாள் ஆண்டுதோறும் எய்த வேண்டுகின்றேம்.

பெரியவர் நீடூழி வாழ்க இனிது என வாழ்த்தி நாமும் வாழ்வோம்.



## ஆரோக்கியம் அழைக்கிறது

# மனம் என்னும் மர்மம்

மனத்தின் ஆற்றல் அளவற்றது. அதை ஆராயும் முயற்சியில் விஞ்ஞானிகள் பல ஆண்டுகளாக ஈடுபட்டு வருகிறார்கள். உடல்–இயல் நிபுணர்களும் மருத்துவர்களும் ரண சிகிச்சை நிபுணர்களும் தவிர பௌதிக ரசாயன விஞ்ஞானிகளும் கணித வல்லுநர்களும் கூட இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். இதுவரையில் உணர்ந்த ஓரளவு விவரங்களே மலைப்பாக இருக்கின்றன.

மூளையும் நரம்புகளும் உடம்பின் ஒவ்வொரு உறுப்பின் இயக்கத்தையும் கவனித்துக் கொள்கின்றன. மூளையின் பல பணிகளில் ஒன்றே மன இயக்கம். உடலின் ஒவ்வொரு தொழிலுக்கும் ஆதாரம் ஓர் உறுப்பு. ஜீரணம் என்ற பணிக்கு வயிற்று உறுப்புக்கள் ஆதாரமாவது போல, மனம் என்பதற்கு ஆதாரம் மூளை என்ற உறுப்பே.

உடலின் புலன் உணர்ச்சிகளை அறிந்து அறிவிக்கும் மூளையேதான் உள்ளத்து உணர்ச்சிகளுக்கும் பொறுப்பு ஏற்கிறது. கோடிக்கணக்கில் பரந்துள்ள மூளையின் நரம்பு – உயிர் அணுக்களில் சிலவே உள்ளத்து உணர்ச்சிகளுக்குப் பொறுப்பு. இன்னும் சில நினைவாற்றலுக்குப் பொறுப்பு, இன்னும் சில கற்பனைக்கும் ஊக்கத்துக்கும் பொறுப்பு; வேறு சில உறக்கத்துக்குப் பொறுப்பு. இவ்வாறு, 'மனம், என்று மக்கள் கருதும் ஒரு மர்ம உறுப்பின் பணிகளை ஏற்று நடத்துவது மூளையே. மூளையின் எந்தக் குறிப்பிட்ட பகுதி, மனத்தின் எந்தக் குறிப்பிட்ட பணியினைப் புரிகிறது என்பதைப் பலகால ஆராய்ச்சி அனுபவத்தில் மெல்ல மெல்ல அறிய முடிகிறது.

மூளையில் எங்காவது பலத்த அடிபட்டவர் ஒருவர் பழைய நினைவுகளை மறந்துவிடுவதும், மூளையில் வேறு ஓர் இடத்தில் காயம்பட்டவர் பிரமை பிடித்துக் காண்பதும் இதனால்தான். இப்போது, மருத்துவ ஆராய்ச்சி முன்னேற்றத்தால், மூளையில் திட்டமாக இன்ன இடத்தில் சிகிச்சை செய்தால் போதும் என்று தெரிந்து சிகிச்சை யளிக்க முடிகிறது.

மூளையின் மன இயக்கத்துக்கு வெறும் ரத்தமும் போஷாக்கும் மட்டும் போதாது. சுவாசக் காற்றின் பிராணவாயு அம்சத்தை மூளை நிரம்பப் பயன்படுத்துவது மனத்தின் தேவைக்கே. இது தவிர, மூளையில் நரம்பு – உயிர் அணுக்களின் இயக்கத்தால் நுட்பமான மின்சக்தியும் உண்டாக்கப்படுகிறது. இரசாயன சக்தியும் உருவாக்கப்படுகிறது. இவற்றின் சக்தியாலேயே இயங்குகிறது 'மனம்'.

உடலும் உள்ளமும் ஒன்றிச் செய்யும் பணிகளிலே மூளையின் பல பிரிவுகளும் ஒருங்கே ஈடுபடுகின்றன. உதாரணமாக ஒருவர் வீணை வாசிக்கும்போது, அவரது கை வீணையை இசைக்கக் காரணமா யிருப்பவை மூளைத்தண்டும் சிறுமூளையும்; ஒலி பேதங்களைச் சன்னமாகக் கேட்கக் காரணமாயிருப்பது, தாலமஸ் என்னும் நடு மூளைப்பகுதி; சாகித்தியமும் ஸ்வரமும் நினைவுப்படுத்திக் கொள்ளத் துணைபுரிவது பெரு மூளையான கார்டெக்ஸ் பகுதி; இசையை அனுபவிக்கும் உணர்ச்சியைத் தூண்டுவது மூளையை ஒட்டிய 'லிம்பிக்' மண்டலம். இம்மண்டலமே மன உணர்ச்சிகளுக்குக் காரணம் என்பதை ஆராய்ச்சிகளால் நிரூபிக்க முடிந்திருக்கிறது. இந்தப் பகுதியைச் சீண்டியும் தூண்டியும் பார்த்ததில், அச்சமும் ஆண்மையும் பிறக்குமிடம் இதுவே, அன்பும் ஆத்திரமும் அதிகரிக்கும் இடம் இதுவே என்பது தெரிகிறது.

'லிம்பிக்' பகுதியுடன் நரம்பு இழைகள் தொடர்பு அதிகம். இந்தப் பகுதி ஹைபதாலமஸ் என்ற மூளைப் பகுதியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. பின்னதுவோ பிட்யூட்டரி அகச் சுரப்பியுடன் மிகவும் நெருங்கியது. இவையெல்லாமாக உள்ளத்தின் அடிப்படை உணர்வுகளுக்கு ஆதாரமானவை.

" மனத்தை அடக்கு. ஆன்மாவை அறியலாம் " என்பது யோகியின் வாக்கு.



இந்த மூளைப் பகுதிகள் பெருமூளையின் ஆதிக்கத்தில் உள்ளவையாகும்.

பிட்யூட்டரி அகச்சுரப்பி தவிர, தைராயிட் அட்ரினல் அகச்சுரப்பிகளும் மன வளர்ச்சிக்கும் மன நிலைக்கும் காரணமானவை. தைராயிட் குறை கண்டால் நோயாளி மந்தமாயிருக்கிறான்; அது அதிகமானாலோ படபடப்பாக இருக்கிறான். பிட்யூட்டரி சுரப்பி, உடலின் வேறு பல சுரப்பிகளை இயக்கும் வேகத்துக்கு ஏற்ப ஒருவன் அடக்கமாகப் பழகுகிறான், அல்லது அடாவடியாகவும் அதிகாரமாகவும் இருக்கிறான்.

பெருமூளையில் காணும் கொத்துக் கொத்தான பகுதிகள்தாம் மனித மூளைக்கும் மூளை. மனித இனத்துக்கே சிறப்பான இந்தப் பகுதியே உயர்ந்த பண்புகளின் பீடம். கபாலத்தின் முன் பகுதிக் கொத்துக்கள் அறிவாற்றலுக்கும் நியாய உணர்வுக்கும் தராதரம் அறிவதற்கும் காரணமானவை; இங்கே கோளாறு வந்தால் குணத்திலே அது தெரியும். அடக்கமான அரசு ஊழியர் ஒருவர் தம் இயல்புக்கு மாறாகத் திடீரென்று மேலதிகாரிகளிடம் எதிர்த்துப் பேசத் தொடங்கி விட்டார். அவரை வேலையை விட்டு நீக்கிவிட்டார்கள். மன நோய்ச் சிகிச்சைக்கு அனுப்பப்பட்ட அவரிடம் மூளைக் கோளாறு உண்டா என்று பார்த்தனர் நரம்புச் சிகிச்சை நிபுணர்கள்.

முன்மண்டையில் மூளைப் பகுதியில் ஒரு பெரிய கட்டி புறப்பட்டிருப்பது தெரிந்தது. அதை அகற்றிச் சிகிச்சை செய்ததும் ஆள் பழையபடி ஆகி விட்டார். வேலையும் திரும்பக் கிடைத்து விட்டது!

பக்கவாட்டில் இருக்கும் பெருமூளைப் பகுதிக் கொத்துக்கள் புத்திக் கூர்மைக்கும் ஆராய்ச்சிக்கும் நினைவாற்றலுக்கும் ஆதாரமானவை. கடந்த கால அனுபவத்தை நினைவுகூர்வது என்பது இல்லாவிட்டால், நிகழ்கால அனுபவத்தை ஆராய்ந்து உணர்வது எப்படி? எதிர்காலத்தை கணிப்பதும் எப்படி? இந்தப் பகுதி மூளை அணுக்கள் தீவிரமாக இயங்கினால் நினைவாற்றல் கூர்மையாக இயங்கும். பழம் நினைவுகள் என்றும் பசுமையாக இருக்கும். ஆனால் இவை நோயுற்றாலோ பாரிசவாயுவால் பீடிக்கப்பட்டாலோ, முதலில் கெடுவது நினைவாற்றலே.

**ம**னித மூளைத் திறனில் சிறப்பானதும், முன்னேற்றத்துக்குக் காரணமானதுமான அம்சம் பேச்சாற்றலே. மனிதனால் தன் எண்ணங்களுக்கும் கற்பனைக்கும் வடிவம் கொடுக்கவும் பிறரிடம் வெளிப்படுத்தவும் முடிகிறதே, அதற்கு முதல்படி பேச்சாற்றலே.

ரசாயன மாறுதலாலும் மூளை மனத்தை இயக்குகிறது. இது ஆராய்ச்சியிலும் தெரிகிறது; அனுபவத்திலும் அறிந்ததே. குடித்தவர் போதையுறுவது ஏன்? மனத்தை நடத்தும் மூளைப் பகுதியின் ரசாயன மாறுதலாலே தான். எப்போதும் அடங்காது அலைபாயும் மனத்தை நிதானப்படுத்துவதற்குக் தரப்படும் 'டிரான்குலய்சர்' மருந்துகள் ரசாயன முறையில் மூளை நரம்பு இயக்க வேகத்தைத் தளர்த்துவதற்குப் பயன்படுகின்றன. மனச் சிகிச்சை நிபுணர்கள் மன நோயாளிகளைக் குணப்படுத்த இத்தகைய மருந்துகளைத் தகுந்த அளவில் தருவதுண்டு.

உறக்கமும் மூளையின் ஒரு பணியே. உண்மையில் மூளை தூங்குவதில்லை. தூக்கத்தின் தன்மையைப் பற்றி விரிவான ஆராய்ச்சிகள் நடந்தபடி இருக்கின்றன. மூளை அணுக்கள் உறங்காதவை. அவை உறங்கி விட்டால் பிறகு உயிர் என்பது ஏது? சொல்லப் போனால் இதயத்துடிப்பில் இல்லை உயிர். இதயத்தை நிறுத்தி எத்தனையோ ரணசிகிச்சைகள் நடைபெறுகின்றன; மாற்று இதயம் கூடப் பொருத்தப்படுகிறது. ஆனால் மூளை அணுக்களை இயங்காமல் நிறுத்த முடியாது.

ஆரோக்கிய வாழ்வுக்கு உறக்கம் அவசியம். கனவும் அவசியம். உடல் உறங்கும் நேரத்தில் தான் உணர்ச்சிகளால் களைத்துப் போன



மூளையில் உருவாகும் நுட்பமான மின் சக்தியை அளந்து வரைபடமாக்கித் தரும் எலக்ட்ரோ என்செபலோகிராம் கருவி.

நரம்புகள் தங்களைத் தளர்த்திக் கொள்கின்றன எனலாம். தூக்கத்திலே இரண்டு நிலைகள்; ஆழ்ந்த உறக்கம் ஒன்று, அளவான உறக்கம் ஒன்று. இரண்டும் மாறி மாறி, உடலுறுப்புகளுக்கும் மன உணர்ச்சிகளுக்கும் ஓய்வளிக்கும் இதமாக விளங்குகின்றன.

சாதாரணமாக எல்லோருக்கும், மூளையின் அமைப்பும் உயிர்—அணு எண்ணிக்கையும் ஒன்று போலத்தான் இருக்கின்றன. ஆளுக்கு ஆள் மூளை வளர்ச்சி வித்தியாசம் ஏன் என்பது ஆராய்ச்சிக்கு உரிய சிந்தனையாகவே இருக்கிறது. ஆனால் ஒன்று. எல்லாரும் எல்லா மூளை அணுக்களையும் எப்போதும் பயன்படுத்துவதில்லை. பயிற்சியாலும் பழக்கத்தாலும் மூளையின் சில இயல்புகள் வேகமாக வளர்ச்சி பெறுகின்றன. பிறப்பால் பெறும் வளர்ச்சியைவிட, சூழ்நிலையால் பெறும் வளர்ச்சி வேகமே அதிகம் எனலாம்.

'**ம**னத்தை ஒருமுகப்படுத்துதல்' என்பதும் மூளையின் தொழிலே. ஒரு வேலையில் ஆர்வமாக ஈடுபட்டிருக்கும் போது பிற உணர்வுகளைத் தெரிந்து கொள்ளும் தன்

மையை அடக்கி வைப்பதே இந்த நிலை. உதாரணமாக, சுவாரசியமாகப் படத்தில் காதல் காட்சியை அனுபவித்துக் கொண்டிருக்கும் போது தியேட்டர் ஆசனத்தில் மூட்டைப் பூச்சிகள் கடிக்கும் வேதனை தெரியாது அல்லவா?

வாழ்வில் உயர்நிலை அடைய விரும்புவோர் மனத்தை ஒருமுகப்படுத்துதலைப் பயிற்சியால் எய்துகின்றனர். அதனால் அதிகம் சாதிக்க முடிகிறது. மனத்தை ஒருமுகப்படுத்துதல் தியானத்துக்கு உதவுகிறது. இது யோக நிலையில் முதல் படி.

மூளையே உடலின் இயக்கங்களுக்குப் பொறுப்பு. அதுவே மன உணர்ச்சிகளுக்கும் பொறுப்பு. என்றாலும், இவற்றை மீறிய உயர்நிலைகளை எட்டவும் மூளை மனிதனுக்கு உதவும். உடல் இயக்க நிலைகளை விட உயர்ந்தது மனம் என்னும் நிலை; அதனைவிட உயர்ந்தது 'புத்தி' என்னும் நிலை. ஆன்மா இவற்றையும் கடந்தது — என்பதே நமது நாட்டு சித்தாந்தம்.

''மனத்தை அடக்கு. ஆன்மாவை அறியலாம்'' என்பது யோகியின் வாக்கு. ஓயாது அலையும் மனத்தைக் கட்டுப்படுத்தி, ஒருமுகப்படுத்துவதற்கு யோகிக்கு உதவுவது சுவாசக் கட்டுப்பாடு. மூளையின் உயர்பகுதிகளைக் கொண்டு தாழ்ந்த பகுதிகளை அடக்கி அடக்கிப் பழகி, முதலில் மூளையையும், அதைக் கொண்டு மனத்தையும் கட்டுப்படுத்த முடிகிறது, அவர்களால்.

ஆரோக்கியமான மனத்துக்கு நல்ல உணவு ஏதேனும் உண்டா? உண்டு என்று கருதியிருக்கிறார்கள் மனத்தை ஆராய்ந்த விஞ்ஞானிகளான முனிவர்கள். எனவேதான் அவர்கள் ஆகார நியமங்களுக்கும் யோக ஆசனங்களுக்கும் தியானத்துக்கும் பிராணாயாமத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்தனர். சாதாரண மனித மூளை பயிற்சியால் பெருநிலையை எட்டக்கூடும், பெரும் சாதனைகளைச் சாதிக்கக் கூடும் என்று நிரூபித்தனர். ஆனால் ஒன்று. சாதாரண 220 வோல்ட் ரேடியோவில் 20 ஆயிரம் வோல்ட்டைத் திடீரென்று திணித்தால் திணறிப் போவது போல் சாதாரண மூளைக்குள் பெரும் நிலைகளைத் திடீரென்று திணித்தால் ஏற்காது. எனவே சிறுகச் சிறுக, ஆண்டுக்கணக்கில் பயிற்சி அளித்து அதை உயர்நிலைக்கு எடுத்துச் செல்லப் பழகினார்கள் யோகநிலை உணர்ந்தவர்கள்.

யோகநிலை எட்ட முயலுவோருக்குக் கிட்டும் சித்திகள் பல. அவையே முடிவல்ல. பெருநிலையை அடையப் பாடுபடுபவர்கள் இடைவழியில் கிட்டும் சித்திகளைப் பெரிதாகக் கருத மாட்டார்கள். இவர்களுக்குப் புலனடக்கம் வருகிறது. உள்ளுறுப்புக்களின் இயக்கங்கள் கூட வசமாகின்றன. சூடு குளிர் போன்ற உணர்ச்சிகளையும் கடக்க முடிகிறது.

நன்கு அடக்கப்பட்ட மூளைக்கு — அதாவது மனத்துக்கு — எவ்வளவு சக்தி உண்டு என்பதை அறிந்தவர் இல்லை. எட்ட எட்ட விரியும் விண்வெளியைப் போலவே பரந்து காண்கிறது, இந்த 'உள்—வெளி'. கோடிக் கணக்கான மூளை நரம்பு—உயிர் அணுக்களில் ஓர் அற்பப் பகுதியையே பெரிய அறிவாளிகளும் மேதைகளும் கூடப் பயன்படுத்துகிறார்கள். பயன்படுத்தாதவை பல கோடி. யோகிகளோ இன்னும் சற்று அதிகம் பயன்படுத்தியே முக்காலமும் உணர்ந்தவராக முடிகிறது என்கிறார்கள். மனத்தின் சக்தியையோ அதன் பீடமான மூளையையோ முற்றும் உணர்ந்தவர் யார்? ''கடல் கண்டோம் என்பார் யாவரே முடிவுறக் கண்டார்?'' என்ற வாக்கு இங்கும் பொருந்தும்.

''மனிதனால் முடியும்; உயர் மனிதனாக வாழ முடியும்'' என்றார் அரவிந்தர். விஞ்ஞானிகளும் இதைத் தமது ஆராய்ச்சி முடிவாக விரைவில் ஒப்புக் கொள்ளலாம்.

ஆலோசனை: **டாக்டர் பி. ராமமூர்த்தி**
கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

## ஆசார்யாளும் மகாத்மாவும்



**1927**ம் வருஷத்தின் பின் பகுதி. மகாத்மா தென்னிந்தியாவில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்தார். காஞ்சி பெரியவர்களைப் பற்றிக் கேள்விப்பற்று அவரைச் சந்திக்கப் பெரிதும் விரும்பினார். பாலக்காட்டுக்கு அருகிலுள்ள நல்லிசேரியில் இவ்விரு மகான்களின் சந்திப்பு நிகழ்ந்தது. ஆசார்யாள் முகாமிட்டிருந்த கோமாதாக்களுக்கான குடிசையில் சந்திப்பு நடைபெற்றது.

ஆதிசங்கரரின் உண்மையான வழித்தோன்றல், ஒரு சிறு காவிக் கதர்த் துணி அணிந்து தரையில் அமர்ந்து எளிமையாகக் காட்சியளித்தார். தேசத்தின் தந்தையான மகாத்மா எளிய சாதாரண விவசாயியைப் போன்ற வாழ்க்கை வாழ்வதைப் பார்த்து அதிசயித்து மகிழ்ந்தார். ஆசார்யாள் சமஸ்கிருதத்தில் உரையாடினார்; மகாத்மா ஹிந்தியில் பேசினார்.



மாலை ஐந்து மணி ஆகிவிட்டது. கோசாலையில் ராஜாஜி உள்ளே நுழைந்து மகாத்மாவுக்கு மாலை உணவு பற்றி நினைவுபடுத்தினார். காந்திஜி ஆறு மணிக்குப் பிறகு எந்த உணவும் உட்கொள்ளுவதில்லை. காந்திஜி திருப்தி கலந்த உணர்வோடு ராஜாஜியிடம் கூறினார்: '' நான் ஆசார்யாளோடு இப்பொழுது நடத்திக் கொண்டிருக்கும் உரையாடலே எனக்கு இன்றைய மாலை உணவாக அமைந்து விட்டது!''

— சங்கர, ஷண்மத மலர் - 1969

# வியப்பு ஏதுமில்லை!!!

காஞ்சியை நினைத்தால் காமாட்சியும்
காசியை நினைத்தால் விசாலாட்சியும்
மதுரையை நினைத்தால் மீனாட்சியும்
அழகிய அசல் பட்டுப் புடவைகளை
நினைத்தால் சாரதா’ஸ்“ம் நினைவிற்கு
வருவதில் வியப்பு ஏதுமில்லை!!!

சாரதாஸின் பட்டுப் புடவைகளை
அணிந்து
லட்சுமிகரமாக
விளங்குங்கள்.

# சாரதாஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்

**தன் பில்டிங், மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 87177**

---

**32, N.S.B. ரோடு, திருச்சி-2. போன்: 7077**




உலகப் புகழ்பெற்ற பழனி வைத்திய திலகம்

வைத்தியராஜ்

# டாக்டர் எஸ். காளிமுத்து

R. M. P. (IND) V. V. C., A. M. I. H.

அவர்களால் தயாரிக்கப்படுகிறது

## வாலிப—வயோதிக, அன்பர்களே!

தங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து, உடல் வலுவில்லாமல் குடும்ப வாழ்க்கையில், நிம்மதியில்லாமல் வயோதிகரைப்போல் களைப்பு மேலிட்டு, வேலைகளைச் சரிவர செய்ய இயலாமை—இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியாமலும் செய்கிற தவறுதல்களே, இப்போது உடல் கெட்டு பலஹீனமடைந்து ரத்தக்குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலஹீனம், உடல் வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி, தாய் தந்தையரிடமும், மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மனவேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறார்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்படவேண்டாம். இம்மாதிரியான வியாதியஸ்தர்கள் அனுபவம் பெற்ற நமது சாஸ்த்ரீய முறையான மருந்து சாப்பிட்டாலே எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று, நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை, ஆர்டரில் தேவைப்பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி.பி.பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி. பி. பி. தபால் செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பயன் தரும் என்பதை அறியவும்.

### ஒரு மாத சிகிச்சை மருந்துகள்

| | | |
|---|---|---|
| ஸ்பெஷல் லேகியம், பஸ்பம் 6 பாட்டில் அடங்கிய செட் | ரூ. | 90.00 |
| ஸ்பெஷல் லேகியம், பஸ்பம் 2 பாட்டில் அடங்கிய செட் | ரூ. | 42.00 |
| தங்கபஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் - 60 வேளை | ரூ. | 120.00 |
| தங்கபஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் - 30 வேளை | ரூ. | 60.00 |

கவர்ன்மெண்ட் ரிஜிஸ்டர்டு T. M. No. 204841

தந்தி: சித்தர், போன்: 316, 316-A, வீடு: 420

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) (KI) பழனி-624601**

(தியேட்டர் ஸ்ரீ ரெங்கராஜாவிற்கு சமீபம்) இந்தியாவின் மாபெரும் வைத்திய ஸ்தாபனம்

### முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

## "விடு படகை!"

கூட்டத்தில் எல்லோருக்கும் முன்னதாகத் தளபதி பரஞ்சோதி விரைந்து வந்து மாமல்லருக்கு வணக்கம் செலுத்தி, "பிரபு! இதென்ன இப்படிச் செய்து விட்டீர்கள்? எங்களையெல்லாம் கதி கலங்க அடித்து விட்டீர்களே?" என்றார். மாமல்லரும் பரஞ்சோதியை ஆர்வத்துடன் ஆலிங்கனம் செய்து கொண்டு "உங்களுக்கெல்லாம் ரொம்பவும் கவலைதான் அளித்து விட்டேன். அப்புறம் நீங்கள் என்னசெய்தீர்கள்? வெள்ளத்தினால் நமது படையில் சேதம் அதிகம் உண்டா?" என்று கேட்க, பரஞ்சோதி, "சூலபாணியின் அருளால் நல்ல சமயத்தில் எச்சரிக்கப்பட்டோம். அதனால் உயிர்ச்சேதம் ஒன்றுமில்லை. எத்தனையோ விஷயங்கள் சொல்ல வேண்டும், பேச வேண்டும். வாருங்கள் பிரபு! இந்தக் கோவிலுக்குள் சிறிது போய்ப் பேசலாம்!" என்று கூறினார். இருவரும் கைகோத்துக்கொண்டு உற்சாகமாக நடந்து சென்று முன் கோபுர வாசல் வழியாகக் கோயிலுக்குள் பிரவேசிக்க, பின்னோடு கூட்டமாக வந்து கிராமவாசிகளைக் கோயிலுக்குள் செல்லாதபடி வீரர்கள் தடுத்து நின்றார்கள்.

மாமல்லரும் பரஞ்சோதியும் அவ்விதம் குதூகலமாகப் பேசிக் கொண்டு போனதையும், சற்றுப் பின்னால் மரத்தடியில் நின்ற தன்னை யாரும் கவனியாததையும் கண்ட சிவகாமிக்குப் பெரும்



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



மனோவேதனை உண்டாயிற்று. ஆயனரும் அவரோடு ரதியும் சுகரும் மட்டும் சிவகாமி நிற்கும் இடம் வந்தார்கள். ''இனிமேல் நீங்கள்தான் என் உண்மையான சிநேகிதர்கள்!'' என்று கூறுவது போல், ரதியையும் சுகரையும் சிவகாமி தடவிக் கொடுத்தாள். முன்னால் சென்ற கூட்டத்தின் ஆரவாரம் சற்று அடங்கியதும் இவர்கள் மடத்தை நோக்கிச் சென்றார்கள்.

வழியில் கோயில் வாசலை நெருங்கிச் சென்றபோது, அங்கே கூடியிருந்த கிராமவாசிகள் சிலர் பேசிக் கொண்டிருந்த வார்த்தைகள் சிவகாமியின் காதில் விழுந்தன.

''பல்லவ குமாரர் இப்படி நம்மை ஏமாற்றி விட்டாரே!''

''நான்தான் சொன்னேனே, முகத்தில் இராஜகளை வடிகிறதென்று? கேவலம் சிற்பியின் முகமா அது?''

''தகப்பனாரைப் போலவே புதல்வரும் வேஷம் போடுவதில் வெகு சமர்த்தர் போலிருக்கிறது!''

''ஆயனர் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காகவே இந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டாராமே?''

''என்னதான் அபிமானம் இருந்தாலும் அவ்வளவு தூரத்துக்குப் போயிருக்கக் கூடாது. ஏதாவது அபாயம் நேர்ந்திருந்தால் பல்லவ சாம்ராஜ்யத்தின் கதி என்ன ஆகிறது?''

''மாமல்லரை விடப் பரஞ்சோதி பெரிய வீரராமே?''



''அதெல்லாம் இல்லை; இரண்டு பேரும் சமம்தான்!''

''யார் சொன்னது? மாமல்லருக்குச் சமமான வீரர் உலகத்திலேயே கிடையாது. பரஞ்சோதியைப் போர்க்களத்துக்குச் சக்கரவர்த்தி அழைத்துப் போயிருந்தார். அதனால் அவருடைய வீரம் வெளியாயிற்று. மாமல்லர் முதன் முதலில் புள்ளலூர்ச் சண்டையில்தானே கலந்து கொண்டார்? அங்கே பரஞ்சோதி இருந்த இடம் தெரியாமல் போய் விடவில்லையா?''

''அவர்களுக்குள்ளே வித்தியாசமே கிடையாதாம். அவ்வளவு அந்நியோந்நிய நண்பர்களாம். நாம் ஏன் வித்தியாசப்படுத்திப் பேச வேண்டும்?''

''எது எப்படியாவது இருக்கட்டும். இரண்டு பேரும் நம் ஊரில் விருந்துண்ணாமல் திரும்பிப் போகக் கூடாது.''

இந்த மாதிரி பலவிதமான பேச்சுக்களையும் காதில் வாங்கிக் கொண்டு சிவகாமி மடத்துக்குப் போய்ச் சேர்ந்தாள். அவளுடைய உள்ளம் அளவில்லாத பெருமையையும், சொல்ல முடியாத வேதனையையும் மாறி மாறி அடைந்து கொண்டிருந்தது.

கிராமவாசிகளின் விருப்பத்தின் படியே மாமல்லரும் பரஞ்சோதியும் மற்ற வீரர்களும், கிராமவாசிகள் அவசரமாகப் பக்குவம் செய்து அன்புடன் அளித்த விருந்தை உண்டார்கள்.

விருந்து முடியும்போது அர்த்த ராத்திரிக்கு மேலாகி விட்டது. பொழுது விடிந்த பிறகு போகலாம் என்று கிராமப் பெரியோர்கள் கேட்டுக்கொண்டது பயன்படவில்லை. இரவுக்கிரவே கிளம்ப வேண்டியது அவசியமாயிருந்தது.

புறப்படுகிற சமயம் வந்தபோது ஆயனரிடமும் சிவகாமியிடமும் விடை பெற்றுக் கொள்ள மாமல்லர் படத்துக்குள்ளே சென்றார்.

''ஆயனரே! உங்களிடம் விடைபெறுவது எனக்குச் சங்கடமாகத்தான் இருக்கிறது. ஆயினும் என்ன செய்யலாம்! புலிகேசியின் படைகள் காஞ்சியை



நெருங்கி வந்து கொண்டிருக்கின்றனவாம். உடனே வரும்படி சக்கரவர்த்தி சொல்லி யனுப்பி யிருக்கிறார்'' என்றார் மாமல்லர்.

மாமல்லரிடம் அளவில்லாத அன்பும் மரியாதையும் கொண்டவரான ஆயனர் ''பிரபு! இவ்வளவு நாள் தாங்கள் இங்கிருந்தது நாங்கள் செய்த பாக்கியம். இதற்கு மேல் நாங்கள் ஆசைப்படக் கூடாது. போய் வாருங்கள். உங்களை வழியனுப்ப நாங்களும் நதிக்கரை வரையில் வரலாமல்லவா?'' என்றார்.

''அவ்வளவு தூரம் வருவது அவசியமில்லை. இஷ்டப்பட்டால் வாருங்கள்!'' என்றார் மாமல்லர்.

மாமல்லர் சிவகாமியை நோக்கிய போது அவள் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்த அபூர்வமான காதலர்க்கு மத்தியில் திடீரென்று ஒரு திரை விழுந்து விட்டது போலிருந்தது.

* * *

இரவு மூன்றாம் ஜாமம் முடியும் சமயத்தில், சந்திரன் மேற்கு வான வட்டத்தின் அடியில் பிரகாசித்துக் கொண்டிருந்தபோது, வராக நதியில் ஆயத்தமாக நின்ற படகுகளில் மாமல்லர், பரஞ்சோதி முதலியோர் ஏறிக் கொண்டார்கள்.

கரையிலே கிராமவாசிகளும் ஆயனரும் சிவகாமியும் நின்றார்கள். இத்தனை நேரமும் எங்கேயோ போய்விட்டு அப்போதுதான் ஓட்ட ஓட்டமாய்த் திரும்பி வந்திருந்த குண்டோதரனும் பின்னால் நின்றான். நதிக் கரையில் மாமல்லர் சிவகாமியுடன் பேசுவதற்கு வசதி கிடைக்கவில்லை! படகில் ஏறிக் கொண்டதும் அவர் கரையிலிருந்த சிவகாமியை உற்று நோக்கினார்.

சிவகாமியும் அவரை அப்போது ஆர்வத்துடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

ஏதாவது சொல்ல வேண்டுமென்று மாமல்லருடைய உதடுகள் துடித்தன. ஆனால், வார்த்தை ஒன்றும் வரவில்லை.

தளபதி பரஞ்சோதி, ''விடு படகை!'' என்று கட்டளை யிட்டார்.

படகு சென்றது. சிவகாமிக்குத் தன் வாழ்நாளின் இன்பத்தை யெல்லாம் அந்தப் படகு கொண்டு போவதுபோல் தோன்றியது.

### நாற்பதாம் அத்தியாயம்

## வாக்குவாதம்

நள்ளிரவைப் பட்டப் பகலாகச் செய்த பால் நிலவில், படகுகள் வராக நதியைத் தாண்டி அக்கரையை அடைந்தன.

கரை சேரும் வரையில் மாமல்லர் பேசவில்லை. பூர்த்தியடைந்த காதலினால் கனிந்திருந்த அவருடைய உள்ளம் கனவு லோகத்திலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

யுத்தம் முடிந்த பிறகு, — வாதாபியின் அரக்கர் படையை ஹதம் செய்து அழித்து வெற்றி மாலை சூடிய பிறகு,— காஞ்சியில் தாமும் சிவகாமியும் ஆனந்தமாகக் கழிக்கப் போகும் நாட்களைக் குறித்த மனோராஜ்யத்தில் அவர் ஆழ்ந்திருந்தார். பாலாற்றில் இது மாதிரியே வெண்மதி தண்ணிலவைப் பொழியும்

# பேபி ஃபுட் பற்ருக்குறை யிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்**

குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும், உணவு தயாரிக்கும் போது, பேபி ஃபுட்




ஒரு ஸ்பூனும், எளிதில் ஜீரணமாகும் பாலமுல் ஒரு ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத் தொடங்குங்கள். பிறகு படிப்படி யாக அதிகமாக்கி, பேபி ஃபுட் பாதியும், பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.

**ஸ்பூனால் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன் பாலமுல் கலந்து பசைபோல் ஆக்குங்கள். சுவைக்கு வேண்டிய சர்க்கரை சேருங்கள். காலையில் பாட்டிலில் கொடுப்பதற்குமுன்







இதை ஸ்பூனால் ஊட்டுங்கள். படிப்படியாய், ஒரு நாளைக்கு 2, 3 தடவைகளாக பாலமுலை, பழச்சாறு, பருப்பு, முட்டை, இவைகளோடு கொடுத்து, சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

100 கிராம், அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம் |
| வைடமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைடமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைடமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைடமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைடமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நியாஸினமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைடமின் C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்

**பாலுடன் கூடிய தானிய உணவு**
**ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே**



கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோஆபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

# யூனிட்டுடன் இணைந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டம்





**1971-72**
**சேர்ந்தோர்**
**எண்ணிக்கை: 503**
**பிசினஸ்: 0.41 கோடி**

**1972-73**
**சேர்ந்தோர்**
**எண்ணிக்கை: 1312**
**பிசினஸ்: 1.07 கோடி**

ஒரே ஆண்டில் இரு மடங்கு
பெருக்கம்! ஆனால், எத்தனை
அருமையான திட்டம் இது!
இதற்கான வரவேற்பு குறைந்த
பட்சம் 20 மடங்காவது அதிகமாக
இருந்திருக்க வேண்டுமன்றோ!




**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

பம்பாய் • கல்கத்தா • புது தில்லி • சென்னை

davp 74/43

இரவுகளில், தாமும் சிவகாமியுமாகப் படகிலே ஆனந்தமாய் மிதந்து செல்லப்போகும் நாட்களைப் பற்றி அவர் எண்ணமிட்டார்.

படகு 'தடார்' என்று கரையில் மோதி நின்றதும், மாமல்லரும் கனவு லோகத்திலிருந்து பூவுலகத்துக்கு வந்தார். கரையில் சற்றுத் தூரத்தில் பறந்து கொண்டிருந்த ரிஷபக் கொடியையும், அதைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்த பல்லவர் படையையும் பார்த்தார். தம்முடன் வந்த வீரர்களில் மிகப் பெரும்பான்மையோர் அங்கிருப்பதைக் கண்டு அவருக்குக் குதூகலம் உண்டாயிற்று.

சட்டென்று மாமல்லருக்குக் கண்ணபிரானின் ஞாபகம் வந்தது. படகிலிருந்து கீழே இறங்கும்போதே, ''தளபதி! கண்ணபிரான் எங்கே? அவன் உங்களுடன் 'வருகிறேன்' என்று சொல்லவில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே இறங்கினார்.

''சொல்லாமலிருப்பானா? தானும் வருவதாகத்தான் பிடிவாதம் பிடித்தான். நான்தான் இங்கேயே இருந்து குதிரைகளுக்குத் தீனி போட்டுக் கவனிக்கும்படி கட்டளையிட்டேன். ஆறு காத தூரம் ஒரே மூச்சில் நாம் போக வேண்டும் அல்லவா?'' என்றார் தளபதி பரஞ்சோதி.

இருவரும் பல்லவர் படையருகே சென்றபோது, ''பல்லவ குமாரர் வாழ்க!'', ''வீர மாமல்லர் வாழ்க! வாழ்க!'' என்ற கோஷம் ஆயிரம் கண்டங்களிலிருந்து கிளம்பி எதிரொலி செய்தது.

அணிவகுத்த படையிலிருந்து ஒரு வீரன் முன்னால் வந்து நின்றான்.

''வரதுங்கா! என்ன சேதி?'' என்று பரஞ்சோதி கேட்டார்.

''தாங்கள் இங்கிருந்து சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டு வீரர்கள் குதிரை மீது வந்தார்கள். அவர்கள் ரதத்துடன் கண்ணபிரானையும் பத்துப் போர்வீரர்களையும் அழைத்துச் சென்றார்கள்.''

''என்ன? கண்ணபிரானை அழைத்துச் சென்றார்களா?'' என்று பரஞ்சோதி பரபரப்புடன் கேட்டார்.

''ஆம், தளபதி! அவசர காரியமாகக் காஞ்சிக்குப் போக வேண்டும் என்று சொன்னார்கள்.''

''அந்த வீரர்கள் யார் தெரியாதா?''

வரதுங்கன் சற்றுத் தயங்கிவிட்டு, ''தூதுவர்களில் ஒருவர், தமது பெயர் வஜ்ரபாஹு என்று சொன்னார். இன்னொருவர் ஒற்றர் படைத் தலைவர் சத்ருக்னன். சிங்க இலச்சினை காட்டிய படியால் கண்ணபிரானையும், வீரர்களையும் அனுப்பினேன். இதோ தளபதிக்கு அவர்கள் கொடுத்த விடேல் விடுகு *!'' என்று கூறி ஓலையை நீட்டினான்.

வஜ்ரபாஹு என்று சொன்னவுடனேயே பரஞ்சோதியும் மாமல்லரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். வந்தவர் சக்கரவர்த்திதான் என்று இருவருக்கும் தெரிந்து போய் விட்டது.

பரஞ்சோதி அவசரமாக ஓலையை வாங்கி நிலாவெளிச்சத்தில் பார்த்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:

''தளபதி பரஞ்சோதிக்கு மகேந்திர போத்தரையர் எழுதுவது: நான் சௌக்கியம். துர்விநீதன் மழவராயக் கோட்டையில் சிறையில் இருக்கிறான். வாதாபிப் படை திருப்பதியைத் தாண்டிவிட்டதாம். மாமல்லனை அழைத்துக் கொண்டு ஒரு கணம்கூட வழியில் தாமதியாமல் காஞ்சி வந்து சேரவும். மாமல்லன் வருவதற்கு மறுத்தால் இந்தக் கட்டளையைக் காட்டி அவனைச் சிறைப்படுத்திக் கொண்டு வரவும்.''



இதற்குக் கீழே விடை வேல் முத்திரை யிட்டிருந்தது. முத்திரைக்குக் கீழே மறுபடியும் எழுதியிருந்தது:

''ஒருவேளை நீங்கள் வருவதற்குள் கோட்டைக் கதவு சாத்தியாகி விட்டால் புத்த பகவானைத் தியானம் செய்யவும்.''

பரஞ்சோதி படித்து விட்டு ஓலையை மாமல்லரிடம் கொடுத்தார். மாமல்லர்

---

* விடை + வேல்: விடேல். விடுகு—ஓலை. அதாவது ரிஷபமும் வேலும் அடையாளமிட்ட பல்லவர் சக்கரவர்த்தியின் ஓலை.

ஓலையை வாங்கிப் படித்தார். படித்து விட்டுப் பரஞ்சோதியை நோக்கினார்.

''பல்லவ குமாரா! தொந்தரவு கொடுக்காமல் உடனே கிளம்புகிறீர்களா? உங்களைச் சிறைப்படுத்தக் கட்டளையிடட்டுமா?'' என்று தளபதி பரஞ்சோதி வேடிக்கை கலந்த குரலில் கேட்டார்.

''ஆம், தளபதி! எங்களைச் சிறைப் படுத்தியே கொண்டு போங்கள். படையெடுத்து வரும் பகைவர்களுக்குப் பயந்து கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளும் நாட்டிலே சிறையாளியா யிருப்பதே மேல்'' என்று மாமல்லர் கூறி, மார்பில் அணிந்திருந்த ஆபரணங்களையும் இடுப்பில் செருகியிருந்த உடைவாளையும் கழற்றிக் கீழே எறிந்தார்.

அப்போது பரஞ்சோதியும் தமது உடைவாளையையும் தலைப்பாகையை



யும் தரையில் எடுத்து எறிந்துவிட்டுச் சொன்னார்: ''எனக்கும் இந்தத் தளபதி உத்தியோகம் வேண்டியதில்லை. தம்மை நம்பி வந்த படை வீரர்களை நட்டாற்றிலே விட்டு விட்டு, ஒரு நாட்டியக்காரப் பெண்ணின் காதலைத் தேடி ஓடும் குமாரச் சக்கரவர்த்தியின் கீழ்த் தளபதியா யிருப்பதைக் காட்டிலும் 'நமப் பார்வதி பதயே! ஹர ஹர மகாதேவா!' என்று பஜனை செய்து கொண்டு ஊர் ஊராகப் போகலாம். இதோ நான் கிளம்புகிறேன். நீங்களும் உங்கள் வீரர்களும் எப்படியாவது போங்கள்!''

மாமல்லர் சற்று நேரம் பூமியையும் சற்று நேரம் வானத்தையும் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ''தளபதி! கிளம்புங்கள், போகலாம். நமக்குள் சண்டை போட்டுக் கொண்டிருப்பதற்கு இது தருணமல்ல. காஞ்சிமா நகரை நெருங்கிப் பகைவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தாமற்போனால் நீங்களும் நானும் கையிலே வாள் பிடித்து என்ன பயன்? என் தந்தையிடம் கோட்டைக் கதவைச் சாத்தக் கூடாதென்றும், காஞ்சிக்கு வெளியே பகைவர்களுடன் போர் நடத்தியே தீர வேண்டும் என்றும் கோரப் போகிறேன். நீர் என்னை ஆமோதிப்பீர் அல்லவா?'' என்றார்.

பரஞ்சோதி ஒருகணம் யோசித்து விட்டு, ''ஐயா! மகேந்திர பல்லவர் தங்களைப் பெற்றெடுத்த தந்தை; அவரிடம் உரிமையுடன் சண்டை பிடித்து எதையும் தாங்கள் கேட்கலாம். ஆனால், பல்லவேந்திரர் என்னுடைய தந்தையும், சக்கரவர்த்தியும், சேனாதிபதியும் மட்டும் அல்ல. அவரே என்னுடைய கடவுள். அவருடைய சித்தம் எதுவோ அதுதான் என்னுடைய விருப்பம். அதற்கு மாறாக என்னால் ஒன்றும் சொல்லவும்முடியாது; செய்யவும் முடியாது. ஆனால், தங்களுடைய தந்தையின் கட்டளை பெற்றுத் தாங்கள் பகைவர்களுடன் போரிடச் செல்லும் பட்சத்தில் தங்களுக்கு ஓர் அடி முன்னாலே நான் இருப்பேன். என் உடம்பில் உயிர் உள்ள வரையில் இந்த வாக்கை மீற மாட்டேன்!'' என்றார்.

நண்பர்கள் இருவரும் ஆயத்தமாக நின்ற குதிரைகள் மீதேறிக் 'கல்வியிற் கரையில்லாத காஞ்சிமா நகரை' நோக்கி விரைந்தார்கள். (தொடரும்)



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

தமிழ் சிறுகதை, நாவல், இலக்கியங்களுக்கும் பத்திரிகை உலகுக்கும் அளப்பரிய பணி புரிந்துள்ள அமரர் ''கல்கி'' அவர்களின் பெயரால் இந்தச் சிறுகதைப் போட்டி நடக்கிறது.

கல்கி அவர்கள் அமரத்துவம் அடைந்து இருப தாண்டுகள் நிறையப் போகிற இந்த ஆண்டில் கல்கி பத்திரிகையின் முப்பத்திநாலாம் ஆண்டு பிறக்கும் தருணத்தில் இந்தப் போட்டியின் முடிவுகள் வெளியாகும்.

முதல் பரிசு பெற்ற சிறுகதை ஆகஸ்டு 4ந் தேதி கல்கி இதழில் பிரசுரமாகும்.

**முதல் பரிசு ரூ. 1000**

**இரண்டாம் பரிசு ரூ. 500**

**மூன்றும் பரிசு தலா ரூ. 250 வீதம் இரண்டு கதைகளுக்கு ரூ. 500**

**பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்படும் இதர கதைகள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வழங்கப்படும்.**

**முடிவு தேதி 30 - 6 - 1974**

கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் பில்லைகள் ஒட்டித் தன் முகவரி இட்ட உறைகள் வைத்து அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது.

சிறுகதைகள் கல்கியில் நாலு அல்லது ஐந்து பக்கங்களில் அடங்குவதாய் இருப்பது நலம்.

எழுத்துத் துறையில் புதிதாக அடியெடுத்து வைக்க விரும்புகிறவர் முதல் முதுபெரும் எழுத்தாளர்வரை அனைவரும் இதில் கலந்து கொண்டு தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தை வளப்படுத்த வேண்டுகிறோம்.

**ஆசிரியர் கல்கி**
**சேத்துப்பட்டு, சென்னை-31**

# "அப்பாலும் அடிசார்ந்தார்!"

## டாக்டர் டி.எம்.பி. மகாதேவன்

**''யார் உற்றார்? யார் அயலார்?'' என்று அன்று மணிவாசகர் சிவபெருமானைப் பற்றி வினவியது இன்றைய சிவாஸ்தான மூர்த்திக்கும் அப்படியே பொருந்தும்; தேசம், மதம், கலாசாரம், இவற்றுக்கு அப்பாற்பட்டு ஆசாரியர்களின் அடிசார்ந்துள்ள அடியார் குழாத்தின் சிலரைக் குறித்துப் பேராசிரியரவர்கள் சிறப்புக் கட்டுரை நல்குகிறார்.**

ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தோருக்கு மட்டுமின்றி உலகம் முழுவதிலும் அஞ்ஞான இருளில் தவிப்போருக்கு ஞான ஒளியைப் பாய்ச்சுவதையே ஆதிசங்கரர் பிறவிப் பணியாகக் கொண்டு அவதரித்தார். இப்பணி அவரது அவதார காலத்தோடு முற்றுப் பெற்றுப் போவது அல்ல. எக்காலமும் தொடர்ந்து வரவேண்டியது இத்திருப் பணி. பணி தொடருவதற்காகவே அவர் நாட்டின் பல பகுதிகளிலும் மடங்களை நிறுவி அவற்றில் தமது திருநாமத்திலேயே ஆசாரிய பரம்பரைகளை ஏற்படுத்தினார். இவற்றுள் நானிலத்தின் ஞான தீபமான கச்சியம்பதியில் காமகோடி பீடத்தை ஸ்தாபித்தார். இப்பீடத்தில் ஆதிசங்கரரிலிருந்து தொடர்ந்து வந்துள்ள குரு பரம்பரையில் அறுபத்தெட்டாமவராகத் திகழும் ஸ்ரீ பெரியவாள் ஆதிசங்கரரின் அதே நோக்கத்தைத் தமது ஒரே லட்சியமாகக் கொண்டு வாழ்ந்து வருகிறார்—அதாவது, ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தைச் சேர்ந்தோரை மட்டுமின்றி உலகம் முழுவதையும் உள்ளுற உயர்த்தி உருமாற்றிப் பூரணத்துவத்தை நோக்கி முன்னேறச் செய்துவருகிறார்.

ஸ்ரீ பெரியவாளின் அருள் மயமான தரிசன மாத்திரத்தில் அடியோடு கவரப்பட்டு, தங்களது உள்ளத்தில் ஓர் உன்னதப் புரட்சியை

தான பண்பாட்டுக்குப் பணி புரிந்திருக்கிறாரோ, அந்தப் பண்பாடே நமது மனித குல முயற்சிக்கெல்லாம் அத்தியாவசியமான அடிப்படையாக இன்றும் உயிர் வாழ்ந்தாக வேண்டும்'' என்கிறார்.

பால் பிரண்டனுக்குப் பிறகு நாற்பதாண்டுகளில் பல தேசங்களைச் சேர்ந்த அறிஞர்களும் ஆத்மசாதகர்களும், சமயத் தலைவர்களும், கலைஞர்களும், ராஜதந்திரிகளும்கூடக் காஞ்சி மாமுனிவரைச் சந்தித்து அதன் மூலம் பாரதத்தின் அமரப் பண்பாட்டை ஆழ்ந்து அறிந்து கொண்டிருக்கிறார்கள்.

1955-ல் ஸ்ரீ பெரியவாளைச் சந்தித்த சிகாகோ பல்கலைக் கழகப் பேராசிரியர் மில்டன் ஸிங்கர், ''இந்தியாவுக்குச் செல்லு முன் அந்நாட்டு மகான்களின் 'ஆத்ம சக்தி' பற்றி நான் நிறையப் படித்தும் கேள்விப்பட்டும் இருக்கிறேன். ஆனால் இது ஏதோ புராதன காலத்தைச் சேர்ந்த சமாசாரமாகவே இருக்கும் என்று எண்ணி வந்தேன். சங்கராசாரியரைக் கண்டபின்னர்தான், இந்த 'ஆத்ம சக்தி' இன்றும் இந்து மதத்தில் ஜீவ சக்தியாக அங்கம் வகிக்கிறது என்று உணர்ந்தேன்'' என்றார்.

பிரசித்திபெற்ற எழுத்தாளரான ஆர்தர் கோஸ்ட்லர், தமது நூல் ஒன்றில் ஆசாரியர்

உணர்ந்த அந்நியர் பலப் பலர். 'அந்நியர்' என்பது நமக்குத்தான். மாமுனிவருக்கு எவர் அந்நியம்?

நாற்பத்து மூன்று ஆண்டுகளுக்குமுன் பெரியவாளைச் சந்தித்து உரையாடிய பால் பிரண்டன் இந்த மேற்கத்தியர்களில் முதலாமவர். அன்றைய பெரியவாளின் திருஉருவம் பற்றி அவர் எழுதினார்: ''எனது விஸ்தாரமான நினைவுச் சித்திரசாலையில் அந்த உன்னதமான முகம் ஒரு மதிப்புக்குரிய ஸ்தானத்தை எடுத்துக் கொண்டு விட்டது. மத்திய சகாப்தம் எனப்படும் காலத்தை அணி செய்கிறிஸ்துவ மகான்களுக்கு அத்தகைய முகம் இருந்திருக்கக் கூடும். ஒரே ஒரு வித்தியாசம்: இம்முகத்தில் கூடுதலாக அறிவுத் திறனும் பிரதிபலித்தது.'' இப்போது, நாற்பத்து மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், பெரியவாளின் எண்பதாவது ஜயந்திக் கொண்டாட்டத்துக்குப் பால் பிரண்டன் அளித்துள்ள வாழ்த்துரையில், இன்றைய உலகச் சூழலில் பெரியவாளின் பிறவிப் பணியை ஆற்றுவது எத்துணை கடினமானது என்பதைக் குறிப்பிட்டு, ''ஸ்ரீ ஸ்வாமிகள் தமது வாழ்நாள் முழுதும் இத்தனை அற்புதமாக எந்த மகத்



களின் திருமுகத்தில் ஓடிய இளநகை அந்தக் குழந்தையாக மாற்றிய அழகைப் பரக்க வருணித்துவிட்டு, ''அந்தப் புன்னகையோடும், அது வெளியிட்ட உணர்வோடும் உவமித்துப் பேசக்கூடிய இன்னொன்றை நான் வேறெங்கும் கண்டதேயில்லை. அதன் ஆகர்ஷணமும், மாதுரியமும் அசாதாரணமாக இருந்தன'' என்கிறார்.

பெரியவாளின் திருஷ்டி விசேஷம் பற்றி அமெரிக்க அறிஞர் ஆர்தர் ஜஸென்பர்க் கூறுவதைப் பாருங்கள் : ''என்னை நோக்கிய அந்த நயனங்களில் அறிவும், அன்பும், அருளும் அற்புதக் கலவையாகப் பின்னியிருந்தன; இவற்றோடுகூட எவ்விதமோ மிகவும் மிருதுவான நகைச்சுவை உணர்வையும் அவை பிரதிபலித்தன.''

அர்ஜென்டைனாவைச் சேர்ந்த குமாரி யூனிஜ் போர்கினி 1962 முதல் பெரியவாளின் பக்தையாக இருப்பவர். ''சுவாமிகளுக்குள்ளாக இயேசுநாதனே மீண்டும் இவ்வுலகுக்கு வந்துவிட்டான். அவர் அன்பின் விக்கிரகம். இயேசுநாதனைப் போலவே உடைமையற்ற துறவற வாழ்வைத் தழுவித் தியானத்திலும், வழிபாட்டிலும், தவத்திலும், உபதேசத்திலும் அவ்வாழ்வைச் செலவிட்டு மக்கட் குலத்தை மேம்படுத்துகிறார். எந்நாளும் அவரது திருவடிகளை வணங்கி, அவரைப் போற்றிப் பூஜித்து வாழ்வேன்'' என்கிறார் இவ்வம்மை.

முன்பு சென்னையில் அமெரிக்கக் கான்ஸல் ஜெனரலாக இருந்த டாக்டர் ஆல்பர்ட் பிராங்க்ளின் பெரியவாளின் பீடாரோஹண வைர விழாவில் பேசும்போது, ''சுவாமிகளிடம் எனக்குள்ள மதிப்புக்கும் நன்றியறிதலுக்கும் வார்த்தைகள் மூலம் புகழாரம் படைப்பது என்றால் இயலாத காரியம். வாழ்க்கை என்கிற சந்தையில் வார்த்தைகளைச் சரக்காகவும், தொழிற் கருவிகளாகவும் பயன்படுத்தி வருகிற நாம், உள்ளுற மாற்றங்களை உண்டாக்கும் ஜீவ சக்திகளைப் பற்றியும், இறுதிச் சத்தியங்களைப் பற்றியும் சொல்வதற்கு இந்தச் சரக்கு அல்லது கருவி பயன்படவில்லை என்றே காண்கிறோம். ஒன்று மட்டும் சொல்கிறேன். நீண்ட நெடுங் காலமாக வந்துள்ள என்னுடைய சமயப் பெருந்தலைகளில் எவரும் இவ்விழாவில் நான் பங்கு கொள்வதன் பொருத்தத்தைப் பற்றி ஐயுற மாட்டார்கள். ஏனெனில், இன்று நாம் யாருக்காக விழா எடுக்கிறோமோ, அந்த ஆத்மா மனித குலத்தின் முடிந்த முடிவான சாதனைகளுக்குப் பிரதிநிதித்துவம் வகிப்பவராவர் என்பதில் எனக்கும் சரி, என் சமய முன்னோர்களுக்கும் சரி பூரண உடன்பாடு உண்டு.''

ஈரான் நாட்டில் டெஹரான் பல்கலைக் கழகத் துணைவேந்தரான ஸைத்—ஹொஸைன் நாஸர் 1970ல் காஞ்சியில் முனிவரைத் தரிசித்துவிட்டு இப்படி எழுதினார் : ''ஜகத்குரு சுவாமிகளின் திருவுருவைக் கண்டு, அவரிடமிருந்து வீசும் இதமான காற்றில் மனிதனை இறைவனிடமிருந்து பிரிக்கும் உலக வாழ்வு என்கிற நிலையே அனைத்துக்கொள்கிற பாக்கியத்தைப் பெற முடிவதை நோக்குமிடத்து, மோட்சம் என்கிற திவ்விய சுதந்திர நிலையே தனது இச்சா சக்தியால் ஓர் உருவம் கொள்கிறது என்ற உண்மை பிரத்தியட்ச அநுபவமாகப் புரிகிறது. முஸ்லிம் என்கிற முறையில் நான் மசூதிகளின் புனிதக் கருவறைகளிலும், எங்கள் மதத்தின் புனிதப் பெரியோர்களிடத்தும் எந்தச் சக்தி வாய்ந்த ஒளியை அநுபவித்திருக்கிறேனோ, அதனையே காஞ்சியில் உணர்ந்தேன். இமாலயத்தைப் போல் மாறாமல் நித்தியமாக உள்ள பாரதத்தின் அமர தத்துவமானது ஜகத்குருவின் கண்களில் தனது மௌன மொழியில் சுடர் விடுகிறது : அப்பார்வை இறைவனின் சிம்மாதனம் திகழும் நமது இதயத்தின் மையக் கருவுக்குள்ளேயே துளைத்துச் செல்கிறது. அவரது கடாட்சத்தால் வெறும் மாமிசப் பிண்டமானது, உள்ளொளியால் ஆத்ம பூரணத்தைப் பிரதிபலிக்கும் அருமணியாக உருமாறுகிறது.''



முற்பிறவிகளின் நற்கருமமே கிரேக்க ராஜ குடும்பத்தினரைப் பெரியவாளின் புனிதச் சந்நிதிக்கு இழுத்து வந்திருக்கிறது. அணு விஞ்ஞானத்தில் கிரேக்க ராஜ மாதாவுக்கு இருந்த ஈடுபாட்டின் விளைவாக அவர் நானாவிதமாகப் பிரிந்து காண்கிற அனைத்துக்கும் மூலம் ஒன்றுதான் என்ற கொள்கையில் பிடிப்புக் கொண்டிருந்தார். புராதன கிரேக்க ஞானிகளின் கருத்துக்களைக் கற்றறிந்து கிரீஸ் இளவரசி ஐரீனியும், அவர்களின் அடிப்படைக் கொள்கையில் ஈடுபாடு கொண்டிருந்தார். அவர்களது கருத்து, 'அத்வைதம்' என்ற புராதன மரபுச் சொத்தாகவே இந்தியாவில் இருந்து வருகிறது என்பதையும், இந்த அத்வைதத்தை வெறும் சித்தாந்தமாக இல்லாமல், இங்கேயே இப்பொழுதே அநுபவிப்பதற்கும் முடியும் என்பதையும், அதன் உயிருள்ள உருவமாகக் காஞ்சி முனிவர் ஒருவர் இருப்பதையும் அறிந்த பின் தாயாருக்கும் மகளாருக்கும் மிகுந்த குதூகலம் உண்டாயிற்று. முற்கரும நற்பயனுகவே இருக்க வேண்டும், எதிர்பார்த்ததைவிட வெகு விரைவில் அவர்கள் இந்தியாவுக்கு வர முடிந்தது. 1966 டிசம்பரில் முதல் முறையாகப் பெரியவாளை ஸ்ரீ காளஹஸ்தியில் தரிசித்தனர். இச்சந்திப்பு முடிந்தபின், ''அவரது அருகில் இருந்த இரு தினங்களும் எக்காலத்திலும் மறக்கவொண்ணுதவை. கலப்படமே இல்லாத ஆத்மிகம் பொலிந்த நாட்கள் அவை. அவரருகே எங்களைக் கொண்டு வந்து சேர்த்த விதியின் விசித்

திரத்தை என் சொல்ல?'' என்றார் ராஜ மாதா. இளவரசியோ, ''சுவாமிகளின் அநுக்கிரகம் மகாசக்தியோடு வெளிப்பட்டது. இந்த மானுடப் பாண்டத்தால் அதைப் பிடித்து வைத்துக் கொள்ளவே இயலவில்லை. இந்தப் பாண்டம் அந்த அநுக்கிரகத்தில் நிரம்பியது போதாமல், அதற்கு மேலாகக் கண்ணீராகவும் வெளியே வடிந்தது. எய்த வேண்டியதை எய்திவிட்டோம் என்ற நிறைவில் பிறந்த அக்கண்ணீர் இந்த மானுடப் பாண்டத்தைக் கழுவி, மெய்ப் பொருளில் தாற்காலிகமாக அதைக் கரைத்துவிட்டது'' என்றார்.

அதன் பிறகு இவ்விருவரும் பல முறை பெரியவாளைத் தரிசிப்பதற்காக வந்திருக்கின்றனர். தங்களது உற்றாரையும், சுற்றத்தாரை







அத்வைத வித்யையில் நிலைபெற்றவர்

ஸ்ரீமதே வேதாந்த ராமாநுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீரங்கநாத மஹா தேசிகாய நம:
ஸ்ரீமதே வேதாந்த ராமாநுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ மஹா தேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ மஹா தேசிகாய நம:
ஸ்ரீமதே பாதுகாஸேவக ராமாநுஜ மஹாதேசிகாய நம:
ஸ்ரீரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம:

ஸ்ரீமத் ஸ்ரீரங்கம்
ஆண்டவன் ஸந்நிதி

ஸ்ரீரங்கம் பெரியாச்ரமம்
முகாம் :
பங்களூர்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபரும் ஸ்ரீ பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரும் ஸ்ரீ சந்த்ரசேகரேந்திர ஸரஸ்வதி என்ற திருநாமம் கொண்டவருமான ஸ்ரீ சங்கராச்சார்யர் அவர்களின் சதாபிஷேக விழாவின் சந்தர்ப்பத்தில் கல்கி சிறப்பிதழ் வெளியிடப்படுகின்றது எனக் கேட்டு மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் அதிபரான இவர்கள் பெரிய தபஸ்விகளாவார்கள். எப்பொழுதும் அத்வைத வித்யையில் நிலைபெற்று இருப்பவர். இந்திரியங்களை ஜெயித்தவர். இவர்கள் — வேத தர்ம சாஸ்திர பரிபாலன ஸபையை நிறுவுதல், வேத பாஷ்யத்தைப் பிரவசனம் செய்யச் செய்தல் போன்ற நல்ல கார்யங்களைச் செய்வதில் ஈடுபட்டவர். எல்லோருக்கும் ஹிதத்தை விரும்புபவர். வர்ணாச்ரம தர்மங்களை நிலைநிறுத்துபவர். வேதத்துக்கு அங்கங்களான சிக்ஷை, வியாகரணம் போன்ற சாஸ்திரங்களைப் பிரவசனம் செய்யச் செய்தல் — ஆகிய இக்கார்யங்களைச் செய்து கொண்டு விளங்குகிறார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

அவர்களுக்கு எண்பது வருடங்கள் பூர்த்தியடைகின்றன எனக் கேள்விப்படுகிறோம். வேதத்தில் சொல்லப்பட்ட நூறு ஆண்டுகளை மேலும் அவர்கள் அடைய வேண்டும் என எங்களது ஆசிரமத்தின் பரதேவதையான ஸ்ரீரங்கநாயகியுடன் கூடிய ஸ்ரீரங்கநாதனையும் அவருடைய திவ்விய பாதங்களையும் பிரார்த்திக்கின்றோம்.

ஸ்ரீ ரங்கநாத திவ்ய மணி பாதுகா ஸ்ம்ருதி:
யாத்ரா ஸ்தானம்: பங்களூர்

(சம்ஸ்கிருதத்தில் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் எழுதி அனுப்பியதன் தமிழாக்கம்)



யும் அழைத்து வந்திருக்கின்றனர். ஒவ்வொரு முறையும் இந்தப் பக்த கோஷ்டியின் எண்ணிக்கை உயர்ந்து வந்திருக்கிறது. அவர்கள் தங்கும் நாட்களும் அதிகரித்து வந்திருக்கின்றன. இவர்கள் மௌனமாகப் பெரியவாள் முன் அமர்ந்து அநுபவித்திருக்கின்றனர். ஆத்மிக அப்பியாசங்களைப் பற்றி விளக்கங்களும் கேட்டு இந்த 'உள் யாத்திரை'யில் வெகு தெளிவாக வழி காட்டும் உபதேசங்களைப் பெரியவாளிடமிருந்து பெற்றிருக்கின்றனர்.

சென்ற 1973 டிஸம்பரில் இவர்கள் மொத்தம் இருபத்தியொரு பேர்கள் வந்தனர். இவர்கள் மூன்று தலைமுறைகளைச் சேர்ந்தவர்கள். இத்தாலி, ஜெர்மனி, பிரான்ஸ், ஸ்பெயின், இங்கிலாந்து முதலிய பல நாடுகளைச் சேர்ந்தவர்கள். எல்லோரும் அரச குடியினர். இவர்களில் கிரேக்க மன்னரும் அவரது அரசியும், ஸ்பெயின் இளவரசியும் இருந்தனர். இந்தக் கோஷ்டி சிவாஸ்தானத்தை வந்தடைந்த போது பெரியவாள் தாப ஜ்வரத்துடன் மிகவும் நோய்வாய்ப் பட்டிருந்தார்கள்.

இச்செய்தி தெரிவிக்கப்பட்டவுடன் அத்தனை பேர் முகத்திலும் துயரம் எழுதி ஒட்டினாற்போல் ஆயிற்று. அவர்களில் ஒருவர்—முதல் முறையாகப் பெரியவாளைத் தரிசிக்க வந்தவர் — அப்போதைய நிலையில் பெரியவாளைச் சிரமப்படுத்த வேண்டாம் என்றும், அவரது அண்மையில் தாங்கள் இருக்கக் கொடுத்து வைத்ததே பாக்கியம்தான் என்றும் கூறியிருக்கிறார். அன்று முழுதும் அவர்கள் சிவாஸ்தானத்திலேயே இருந்தனர். மூங்கில் பிளாச்சுச் சாளரத்தின் வழியே உள்ளே சயனித்திருந்த முனிவரை நோக்கிய வண்ணம். பெரியவாள் அன்றெல்லாம் கண்களைக்கூடத் திறவாமல் படுத்திருந்தார்கள். பக்த கோஷ்டியினர் இருவிதமான உணர்ச்சிகளோடு இரவு சென்னைக்குத் திரும்பினார்கள். பெரியவாளைத் தரிசனம் செய்தோமே என்பதில் மகிழ்ச்சி; இப்படி நோயுற்றிருக்கிறாரே என்பதில் ஆழ்ந்த விசாரம். மறு தினமும் திருவண்ணாமலைக்குப் போகும் வழியில் சிவாஸ்தானத்துக்குச் சென்றனர்.

அவர்களது வாழ்நாட்களிலேயே பரமானந்தம் அடைந்த தினம் அது! பெரியவாள் எழுந்து அமர்ந்து கொண்டு அவர்களுக்கு முகமன் கூறுகிறார்கள்! அனைவரும் பெரியவாளின் ஆசிகளைப் பெற்றனர். அவர்களில் ஒருவர் பரிபூரணத் திருப்தியோடு, ''இப்போது நான் சாகலாம்'' என்று ஆர்த்துக் கூறினார். தங்களுக்கு இப்படிப்பட்ட தரிசனமும், சம்பாஷணமும் தந்தருளிய பெரியவாளுக்கு ராஜ மாதா தமது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். பெரியவாளிடம் அவர், ''இந்த உலகத்தில் இன்று என்னைவிடப் பெருமிதம் படைத்த தாயார் எவரும் இருப்பதற்கில்லை. என் குழந்தைகள் எல்லோருடனும் இன்று தங்களைத் தரிசித்து, தங்களுடைய அநுக்கிரகத்தைப் பெறும் பாக்கியத்தை வழங்கிவிட்டீர்கள்'' என்றார்.

ராஜமாதாவுக்கு மூன்று மக்கள் — ஒரு புத்திரர், இரண்டு புதல்விகள். புதல்விகளில் ஒருத்தி ஸ்பெயின் இளவரசரின் மனைவி.



பெட்ரோல் விலை உயர்வையொட்டி அமெரிக்காவில் தயாராகியுள்ள மின்சார கார். பாட்டரியில் ஓடுகிறது. அவ்வப்போது வீட்டில் பிளக்கைப் பொருத்தி பாட்டரியை 'சார்ஜ்' செய்து கொள்ளலாம்! பிளாஸ்டிக்கினால் உருவானது இது. இருவரை ஏற்றிச் செல்லும். மணிக்கு 45 கிலோ மீட்டர் வேகம் உடைய இதனை 80 கிலோ மீட்டர் ஓடிய பிறகு மீண்டும் 'சார்ஜ்' செய்ய வேண்டும். 'அமெரிக்காவுக்குச் சரி, இங்கே பெட்ரோல் விலை உயர்வுடன் மின்வெட்டும் இருக்கிறதே' என்கிறீர்களா?

இவர் ஸ்பெயின் இளவரசரோடு இவ்வாண்டு பிப்ரவரியில் மீண்டும் இந்தியாவுக்கு ராஜாங்க ரீதியில் வந்தார். இத்தம்பதியர் தில்லியிலிருந்து விசேஷ விமானத்தில் சென்னைக்கு வந்து, சிவாஸ்தானத்துக்குச் சென்றனர். சுமார் அரை மணி நேரம் பெரியவாளின் சந்நிதியில் இருந்தனர். தங்களது பிரஜைகளுக்காகவும், குடும்பத்துக்காகவும் பெரியவாளின் அநுக்கிரகத்தைப் பெற்றனர்.

இவர்களில் மிகவும் இளந் தலைமுறையினர்கூடப் பெரியவாளின் சக்தி வாய்ந்த அநுக்கிரகத்தை உணர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. தாய்நாடு திரும்பியபின், பதினாலே வயதான ஓர் இளவரசி எழுதுவதைப் பாருங்கள்: ''மெய்யாகவே அற்புதமான இந்த அநுபவத்தை எண்ணும்போது நன்றி உணர்வு ஏற்படுகிறது. பள்ளித் தோழியிடம் நான் பேசியதிலிருந்து அவளும் சைவ உணவை மேற்கொண்டுவிட்டாள். அவளுக்கு இந்தியாவுக்குப் போக வேண்டும் என்று ஏக ஆசையாகிவிட்டது. அடுத்த முறை அவள் எங்களோடு வந்து சுவாமிகளின் ஆசியைப் பெற முடிந்தால் எனக்கும் மிக மகிழ்ச்சியாயிருக்கும். ஏனென்றால் ஒரு மனிதருக்கு ஏற்படக்கூடிய மகா அற்புத நிகழ்ச்சி சுவாமிகளின் ஆசியைப் பெறுவதுதான்.''

எட்டே வயதுப் பிஞ்சு ஒன்று இப்படி எழுதுகிறது: ''எங்களை இந்தியாவுக்கு வரவழைத்து, புண்ணிய மலையையும் (திருவண்ணாமலை) சுவாமிகளையும் காணச் செய்ததற்கு நன்றி.''

முன்னொரு சமயம் ஐரீனி ஒரு கடிதத்தில் எழுதியது இந்த ராஜ குடும்பம் முழுவதன் எண்ணத்தையும் பிரதிபலிக்கிறது.

டாக்டர் எஸ். இ. டூலேவ் ருஷ்ய நாட்டைச் சேர்ந்தவர். இந்திய வேதாந்த நூல்கள், கலைகள், சிற்பங்கள் பயின்று பல புத்தகங்கள் எழுதியவர். அவர் 24-2-1965ல் ஆசாரிய ஸ்வாமிகள் கங்குவார்சத்திரத்துக்கருகில் ஒரு கிராமத்தில் தங்கியிருந்த போது சந்தித்துச் சில சந்தேகங்களுக்கு விளக்கம் பெற்றார்.

அவருடைய ஒரு கேள்வி: ''ஒரு மனிதனுக்கு மதத்தில் நம்பிக்கை இல்லை. அவன் எந்த ஆசாரத்தையும் அனுஷ்டிப்பதில்லை. கோவிலுக்கோ சர்ச்சுக்கோ போவதில்லை. ஆனால் அவன் எப்போதும் நல்லதையே நினைக்கிறான்; நல்லதையே செய்கிறான். வாழ்நாள் முழுவதையும் இப்படியே கழித்து விடுகிறான். அப்படிப்பட்டவனுக்கு விமோசனம் உண்டா?''

பெரியவர்கள் கண்களை மூடிச் சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்து விட்டார். அந்தச் சில விநாடிகள் அந்த இடம் முழுவதும் ஒரு தெய்விக அமைதி சூழ்ந்தது. அந்தத் தெய்விக அமைதிக்குப் பிறகு பெரியவர்கள் பதில் சொன்னார்கள்: ''உண்டு'' என்று.

இதைக் கேட்டவுடன் டாக்டர் டூலேவ் அவர்களுக்குச் சொல்லி முடியாத குதூகலம். தம் வாழ்க்கையில் என்றும் அனுபவித்திராத ஆனந்தம். எட்டாக் கனியை எட்டிவிட்ட இன்பம். ''மிக்க நன்றி; மிக்க நன்றி; மிக்க நன்றி. எனக்கு ரொம்பத் திருப்தி'' என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

பெரியவர்கள் தமது பதிலைப் பின்வருமாறு விளக்கினார்கள்:

## நல்லவனாக வாழ்ந்தால் போதாதா?



''இன்று உலகம் போகிற போக்கைப் பார்த்து அதற்கு ஏற்பப் பதில் அளித்துவிட்டதாக நினைக்காதீர்கள். அப்படியல்ல. நான் சொன்ன பதில் எங்கள் புராதன சாஸ்திரங்களிலேயே சொல்லப்பட்டுள்ளது. கடவுள் பக்தர்கள் பலவிதம். அக்னாஸ்டிக் என்ற நிரீசுவர வாதிகள் தங்கள் புத்தியை உபயோகித்துக் கடவுட் தன்மையை ஆராய்பவர்கள். அவர்கள் கடைசியில் கடவுள் என்று கிடையாது என்ற முடிவுக்கு வருவார்கள். அடுத்தாற்போல் புத்த மதத்தவர்கள்—முக்கியமாக சூன்யவாதிகள், கடவுள் இருக்கவே முடியாது என்பார்கள். மூன்றாவதாக ஜைனர்கள். அவர்கள் உடலை வருத்தும் விரதங்களை அனுஷ்டிப்பவர்கள். நான்காவதாக சைவர்கள், வைணவர்கள். அவர்கள் கடவுளைச் சொந்தம் கொண்டாடிப் பக்தி செலுத்துவார்கள். கடைசியாக அத்வைதிகள். அவர்கள் இந்தப் பிரபஞ்சமே அந்த உண்மைப் பொருளின் வெளியீடு என்று நினைப்பவர்கள். இவர்கள் எல்லோருமே உண்மைக்கு அண்மையில் இருப்பவர்கள்தாம். இவர்களுக்குள் உள்ள வித்தியாசம், இறைவனுக்கும் இவர்களுக்குமுள்ள இடைவெளிகளிலுள்ள வித்தியாசங்கள்தாம். கடவுளின் தன்மையை ஒருவன் தன் புத்தி சாதுரியம் கொண்டு அலசி ஆராய்ந்து இறைவனே கிடையாது என்ற முடிவுக்கு வந்தாலும், அவன், கடவுளைப் பற்றியே நினைக்காது சோம்பேறியாகக் காலம் கழிப்பவனைவிட எவ்வளவோ மேல். இதை நான் சொல்லவில்லை. எங்கள் சாஸ்திரம் கூறுகிறது.''





''வார்த்தைகளில் சொல்ல முடியாதெனினும், பக்தியின் உருவகமாகக் கனி முதலானவைகளை நிவேதிப்பதுபோல் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஒரு சொல் நிவேதனம் செய்யலாமாயின் அச்சொற்கள் இவையே: மிக மிக ஆழ்ந்த பக்தி, நன்றி.''

இளவரசி மேலும் கூறுவார்: ''ஸ்வாமிகளின் சந்நிதிக்கு வந்து அவரை வழிபடுவதாக அடிக்கடி சொல்கிற மனோராஜ்யம், வெறும் கற்பனையாக இன்றி வாஸ்தவமாக ஆகிறதை என் சொல்ல? எண்ணத்தின் மூலம் எங்கெங்கோ தூர தூரம் சுற்றிவிட்டுப் பிறகு அவரிடம் வந்தடைகிற போது, 'தொலைவில் போகவில்லை; நமக்கு உள்ளேயேதான் கண்டு கொண்டோம்' என்று தெரிகிறது. இந்த வெளி வாழ்க்கையில் பௌதிகமாக நீண்ட தூரம் கடந்து அவரிடம் ஸ்தூலமாக வந்து நிற்கும் போதும், 'தொலைதூரம் போகவில்லை, ஆத்மாவின் ஆழ்ந்த அடிமட்டத்துக்கே வந்திருக்கிறோம்' என்று தெரிகிறது. அவரது சக்தியால் அவரவருக்கும் தங்களது உள் மன அமைப்பு முழுதும் புலப்படுகிறது. பைபிளில் சொல்லப்படுவது போல் நம் பாவ புண்ணியங்கள் அற்றுப்படியாகித் தீர்ப்புவழங்கப்படும் தினம் இங்கேயே -சத்தியமான அநுபவமாகிறது. இதற்குப்பின் அவரது திருஷ்டி நம்மைத் தூய்மைப்படுத்தி, அந்தக் கண்களிலேயே ஆத்மாவைக் காணச் செய்கிறது. அதன் அழகால், ஆற்றலால், மென்மையால், மோனத்தால் ஒருவர் தமது உள்ளார்ந்த அஸ்திவார நிலைக்கே சரேல் என்று செலுத்தப்படுகிறார்.''

ஆதிசங்கர பகவத்பாதர்களின் நேர்சீடரான ஸ்ரீ தோடகாசாரியர் தமது குருநாதரைப்பற்றி மொழிந்ததைவிட இக்கட்டுரையை முடிக்க வேறு பொருத்தமான சொல் இராது. தோடகர் கூறுவார்: ('யேஷாம் நீ ஸூர்ய' என்ற சுலோகம்)

'' ஜனனத்துக்கும், மரணத்துக்குமாக என்னை ஓயாமல் ஊசலாட விடும் அஞ்ஞான இருளை அடியோடு அழிக்கும் சூரியப் பிரகாசமாக எவரது அறிவொளி திகழுகிறதோ; மறையறிவும், மன அமைதியும், அடக்கமும் அணியாக அமைந்த சீடர் குழாம் எவரது அடியிணைகளை அடைக்கலம் கொண்டு உடனுக்குடனே வீட்டுப் பேறு எய்துகின்றனவோ, அந்தத் துறவற வரிஷ்டரை எனது ஆயுட்காலம் உள்ளளவும் வணங்குகிறேன்.''

யதி வர மதிதான் யாவதாயுர் நமாமி.

Hosiery made of pure

# GRASIM

## STAPLE FIBRE

has a better appearance,
fuller feel, equal stretch,
excellent durability,
and high dimensional stability

If you are in the manufacturing line, Grasim Staple Fibre could lead you to bigger Sales, bigger Profits. A slight modification in your knitting methods such as increasing the courses per inch will help you to manufacture firm and compact knitted garments from 100% Staple Fibre.




**THE GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD.**
Birlagram, Nagda (M.P.)

டெட் சலவைக் கட்டி

சோப்பைவிட 1½ மடங்கு அதிக சக்தி வாய்ந்தது எளிதில் நுரைவிடாத நீரிலும்!






கண்டதுமில்லை, காணப் போவதுமில்லை—இத்தகைய வெண்மை—பெறவே டெட்டின் தரமான தயாரிப்புகள்!

Shilpi-HPMA-31A/73 Tam

## 39. அணுவாய்ச் சிறுத்த அவனி

நாட்டுப் பாதுகாப்புக்கு என்று மனிதன் தயாரித்துக் குவிக்கும் ஆயுதங்களிலிருந்து உலகத்துக்கே இன்று பாதுகாப்பு தேவைப்படுகிறது! அந்த அளவுக்குச் சந்தேகப் பேய் மனிதனின் அழிக்கும் ஆற்றலை வளர்த்து விட்டிருக்கிறது.

விண்ணை வெற்றிகொண்ட மனிதன் இன்னமும் அச்சத்தை வெல்லவில்லை. எதிராளி ஏமாற்றி விடுவானோ என்ற ஐயப்பாட்டை விட்டொழிக்க அவன் பழகவில்லை. அதனால் எதிராளியிடம் நம்பிக்கை வைத்துத் தன்னிடம் உள்ள ஆயுதங்களைக் குறைத்துக் கொள்வதற்குப் பதில் அவன் எதிராளியைவிடத் தான் பலசாலியாக விளங்க வேண்டும் என்ற நோக்கில் மேன்மேலும் அசுர குண்டுகளைச் செய்து குவிக்கிறான். அவற்றை ஏந்திப் பறந்து போய்த் தாக்க ஏவுகணைகளையும் தயாரிக்கிறான்.



# விண்ணும் மண்ணும்

விண்ணைச் சாடும் விஞ்ஞானத்தை எதிரியைச் சாடவும் பயன்படுத்துகிறான். அவனுடைய விண்ணாசையும் மண்ணாசையை யொட்டியே செயல்படுகிறது!



விண்வெளி விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக மக்கள் குலத்துக்கு அளப்பரிய நன்மைகள் பெருகிப் பூவுலகில் வாழ்வு வளம் பெற வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்பிய அனுபமா, அந்த விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாகவே மனிதனின் அழிக்கும் ஆற்றலும் அபரிமிதமாக வளர்ந்திருப்பதாகத் தனஞ்செயனும் மைக்கேலும் கூறி வந்த போது அழுதே விட்டாள்.

அவளுக்கு ஏற்கனவே தெரிந்திராத விஷயம் எதையும் அவர்கள் புதிதாகப் பேசிவிடவில்லைதான் என்றாலும் மாறி மாறி மூச்சு விடாமல் குற்றம் சாட்டுவது போல் அவ்விருவரும் அடுக்கியபோது துயர் தாங்காமல் இக்குமுக்காடிக்கடைசியில்வெடித்தேவிட்டாள். அவளுடைய மனம் இத்தனை மென்மையானது என்பதை மைக்கேல் கூட உணர்ந்திருக்கவில்லை. அந்த உள்ளம் விஞ்ஞான வெற்றிகளினால் கர்வம்

**கி.ராஜேந்திரன்**

அடைவதற்குப் பதில் மக்கள் சமுதாயத்தின் மீது அளப்பரிய பரிவும் பாசமும் ததும்பப் பரிதவிக்கிறது என்பதைக் கண்டபோது மைக்கேல் ஆச்சரியமடைந்தான். 'இத்தனை நாட்கள் இவளோடு பழகியிருந்தும் இவள் இதயத்தின் இந்தப் பகுதியினை இதுவரை நான் பார்த்தறியவில்லையே' என்று எண்ணி இலேசாக மிரண்டுகூடப் போனான்.

''அனு! என்ன இது? கண்ணைத் துடைத்துக் கொள்'' என்று தனஞ்செயன் வியப்பும் திகைப்புமாகக் கைக்குட்டையை எடுத்துத் தந்தான். ''கண்ணீர் விட்டு அழும்படியாக நாங்கள் அப்படி என்ன சொல்லிவிட்டோம்?''

''விண்வெளி விஞ்ஞானி என்று கூறிக் கொள்ளவே வெட்கப்படும் அளவுக்கு இடித்துரைத்து விட்டீர்களே, போதாதா?'' என்றாள் அனுபமா.

''அழகுதான்'' என்றான் மைக்கேல். ''ஒரு விஞ்ஞானியின் நோக்கம், லட்சியம் எல்லாம் விஞ்ஞான வளர்ச்சியாக மட்டும்தான் இருக்க முடியும். அந்த வளர்ச்சியை ஆக்க ரீதியாகவோ அல்லது அழிப்பதற்கோ பயன்படுத்துவது அரசியல்வாதிகளின் காரியம். தகாத காரியங்களைச் செய்யுமாறு நாம் வற்புறுத்தலுக்கு ஆளாகலாம். ஆனால் பொறுப்பு நம்முடையது அல்ல. அதனால் குற்ற உணர்ச்சியால் நாம் பாதிக்கப்பட வேண்டியதும் இல்லை.''

இதைக் கேட்டதும் அனுபமாவின் விம்மலும் விசும்பலும் முன்னைக் காட்டிலும் அதிகமாகி விட்டன. ஆட்சியில் உள்ள அரசியல்வாதிகளின் உத்தரவுக்குப் பணிய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் போது விஞ்ஞானி அசுர சக்திகளை அவிழ்த்து விடுகிறோமே என்ற குற்ற உணர்வால் பீடிக்கப்பட வேண்டியதில்லை என்ற வாதத்தில் நியாயம் இருக்கலாம். ஆனால் அனுபமா மைக்கேலை வஞ்சித்து அல்லவோ அழைத்துப்



போகிறான், பாரதத்துக்கு? தானாக மனமொப்பி இந்த இழிவான காரியத்தில் இறங்கியவளாயிற்றே! இந்தியா நாளையோ அல்லது மறு தினமோ மாபெரும் ஏவுகணைகளைத் தயாரித்து விடும் என்று சொல்வதற்கில்லை தான். என்றாலும் அதற்குரிய அறிவாற்றலைத் தானே அவள் இறக்குமதி செய்து கொண்டிருக்கிறாள்! இதை எண்ணி அவள் மனம் வெந்தபோது உஷ்ணமான கண்ணீர் விமானத்தில் உள்ள மற்றப் பயணிகளில் சிலர் திரும்பிப் பார்க்கும் அளவுக்குப் பெருகியது. பிறர் கவனிப்பதைக் குறிப்பால் தனஞ்செயன் உணர்த்தியதும் அவள் மிகுந்த பிரயாசைப்பட்டுத் துயரை அடக்கிக் கொண்டு கேட்டாள்:

''நியூயார்க்கில் 'மியூஸியம் ஆஃப் மாடர்ன் ஆர்ட்' பார்த்தேன், என்கிறீர்களே, அதில் பிக்காஸோவின் ஓவியம் ஒன்று இருக்கிறதல்லவா ?''

''எதைச் சொல்கிறாய்? நாலு பக்கச் சுவர்களும் போதாமல் மேல் கூரையிலும் ஓவியங்கள் தீட்டப்பட்ட அறையைக் குறிப்பிடுகிறாயா ?''

''ஸ்பெயின் தேசத்தில் நடந்த 'உள் நாட்டுப் போரின் அவலங்களைச் சித்திரிக்கும் பிரம்மாண்டமான படைப்பு அது'' என்று மைக்கேல் விவரித்தான். ''1936 முதல் 39 வரை நடந்த அந்த யுத்தத்தைப் போல் பயங்கரமான உள்நாட்டுப் போர் உலக சரித்திரத்திலேயே வேறு ஒன்று கிடையாது. ஒரே நாட்டு மக்கள், ஒரே மதத்தவர், ஒரே மொழி பேசுபவர் இரு கட்சியினராகப் பிரிந்து ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டார்கள். இவ்விதம் அவர்கள் தங்களைத் தாங்களே அழித்துக் கொள்ள ஒரு பக்கம் ஜெர்மனியும், இத்தாலியும் உதவின; மறுபக்கத்துக்கு ருஷ்யா உதவியது. உலக யுத்தத்துக்கு ஒத்திகை பார்த்ததாகவே முடிந்த இந்த உள்நாட்டுப் போரில் 700,000 மக்கள் இறந்தனர் என்பது மட்டுமல்ல துயர் தரும் விஷயம். அவர்கள் தங்கள் 'சகோதரர்'களால் கொல்லப்பட்டு மாண்டனர் என்பதுதான் கொடுமையிலும் கொடுமை. 300,000 பேர் யுத்தத்தில் உயிர் துறந்தனர் என்றால் 100,000 பேர் கொலை செய்யப்பட்டும் தூக்கிலிடப்பட்டும் இறந்தனர். இன்னும் 200,000 பேர் பசியாலும் பிணியாலும் செத்தனர்!''

''கேட்கவே அருவருப்பாகவும் பயங்கரமாகவும் இருக்கிறதே !'' என்றான் தனஞ்செயன். ''அந்த ஓவியத்தைப் பார்த்தபோதும் வேதனை இதயத்தை நிறைக்கத்தான் செய்தது.''

''போரின் அத்தனை அவலங்களையும் வண்ணங்களாக்கி அதன் அபத்தத்



## வரமருளும் வராகி

புதுக்கோட்டையில் புவனேசுவரி ஆலயம் அமைத்து நல்லறம் இயற்றி வரும் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் ஆண்டுதோறும் தமது பரம குருவின் ஜயந்தியை ஒட்டி மிகச் சக்திவாய்ந்த தேவதா ஹோமங்களை வெகு சிறப்புடன் நடத்தி வருவதை ஆஸ்திகர் அறிவர். இவ்வருடம் மே 4-ந் தேதியிலிருந்து ஸ்ரீ மகா வராஹி மகா மந்திர லக்ஷ ஹோமம் நடக்கிறது. இந்தப் பெரு யக்ஞம் மே 31ந் தேதி பூர்த்தி பெறுகிறது. வராக உருத் தரித்து இகபர நலன்களை அள்ளியருளும் பராசக்தியின் இவ்வழிபாட்டில் கலந்துகொள்வதால் நாட்டையும், வீட்டையும், உலகத்தையும் உள்ளத்தையும் பீடித்துள்ள தீமைகளைப் போக்கிக் கொள்ளலாம் எனக் கருதிச் சுவாமிகள் இந்த வேள்வியை நடத்துகிறார்கள். இதற்கு ரூ. 18 அனுப்பி வைக்கும் அன்பர்களுக்கு ஹோமப் பிரசாதமும், ரக்ஷையும் அனுப்பி வைக்கப்படும். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ எஸ். வைத்யநாத சாஸ்திரிகள், காரியதரிசி, ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திர அதிஷ்டானம், கீழ ஏழாம் வீதி, புதுக்கோட்டை-1





தன்மையைத் தூரிகையாக்கித் தமது துயரக் கண்ணீரைச் சேர்த்துச் சித்திரவதைக்குள்ளான தம் மனத்திலே இவற்றை இணைத்துக் குழைத்து பிக்காஸோ வரைந்த ஓவியம் அது. அவர் பிரான்ஸிலே வாழ்ந்தாலும் ஸ்பெய்னிலே பிறந்தவர் அல்லவா? உலகத் தலைவர்கள் அந்த ஓவியத்தை உன்னிப்பாய்ச் சற்று நேரம் ஆராய்ந்தால் பிறகு போர் என்பதே அவனியில் தலை காட்டாது என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றாள் அனுபமா.

'' அதொன்றும் நடக்காது அனு! போரின் அர்த்தமற்ற தன்மையையும் அளப்பரிய வேதனையையும் ஓவியங்களாக்கிய பிக்காஸோ இவற்றிலிருந்து மனித குலம் விடுதலை காண்பது எளிதல்ல என்பதையும் உணர்ந்திருந்தார். அதனால்தான் மனிதன் அன்பைப் பெற முயல்வதையும் சந்தோஷமாக வாழ நினைப்பதையும் கேலி செய்தும் பல ஓவியங்களை அவரே தீட்டியிருக்கிறார்'' என்றான் மைக்கேல்.

''யுத்தம் புரியத் தேவையான தீரத்தைவிடச் சண்டையில் இறங்காமலிருக்க அதிகமான தைரியம் வேண்டும்'' என்றான் தனஞ்செயன்.

'' அதனால்தான் காந்திஜியின் அஹிம்சா தர்மம் உலகத்தில் நடைபெற்றுள்ள எத்தனையோ வீரதீரச் செயல்கள் எல்லாவற்றையும்விடச் சிறந்ததாகப் போற்றப்படுகிறது!'' என்றான் மைக்கேல்.

'' 'ஒரு கன்னத்தில் அடித்தவனுக்கு மறு கன்னத்தைக் காட்டு' என்றார் ஏசு. இதைவிடக்கூட ஒரு படி மேலே போய், 'எதிரிக்கு உன்னைத் தாக்கும் எண்ணம் இருப்பதாகத் தெரிய வரும்போதே நான் திருப்பித் தாக்கப் போவதில்லை என்பதைத் தைரியமாகத் தெளிவுபடுத்திவிடு' என்றார் ராஜாஜி. 'எதிரியிடமும் மனமாற்றம் ஏற்படும் என்று முழு மனத்துடன் நம்பி, அணு ஆயுதங்களையெல்லாம் கடலில் போட்டுவிடு' என்று அறிவுரை வழங்கினார். ஆனால் உலகத் தலைவர்கள் அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்கப் பயப்படுகிறார்கள்!'' இவ்வாறு தனஞ்செயன் கூறியதும் அனுபமா ஒருவித ஆவேசத்தோடு பேசினாள்:

''இந்த உலகத்தையே அவர்கள் முக்கியமானதாகவும், பெரிதாகவும், முடிவாகவும் நினைத்துக் கொண்டிருப்பதால்தான் அப்படி அச்சம் ஏற்படுகிறது. சில நிமிஷங்களுக்கு இந்த உலகத்தையும் இதன் பிரச்னைகளையும் மறந்துவிட்டு அண்ட சராசரத்தை உலகத் தலைவர்கள் நோக்கட்டும். அமெரிக்கா அனுப்பிய ''பயனீர்—10'' என்ற விண்கலம் இருபத்தொரு மாதங்கள் பயணம் செய்து இலட்சக் கணக்கான மைல்களைக் கடந்து, ஜூபிடர் கிரகத்தை நெருங்கியது. ஆயினும் அது மிக நெருக்கமாக வியாழனை அடைந்த கட்டத்தில் அதற்கும் அந்தக் கிரகத்துக்கும் இடையே இருந்த தூரம் 81,000 மைல்! இதன் பின்னர் பயனீர்—10 விண்கலம் நமது சூரிய மண்டலத்தை விட்டே போய்விட்டது. அடுத்தாற்போல் அது மற்றொரு சூரிய மண்டலத்தை — அதாவது நமக்கு மிக மிக

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

## ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

## ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

---

நினைவு அஞ்சலி

K. வெங்கடசுப்ரமணியன் (ரமணி)



தோற்றம்: 28-5-54 மறைவு: 30-5-71

ஒழுக்கம், அறிவு, அன்பு, அடக்கம் ஆகிய அரும்பெரும் குணங்களை அணிகலன்களாகக் கொண்டு எங்களிடையே இருந்தாய். இன்று உன் பிரிவால் அமைதி இழந்து தவிக்கிறோம். உனது ஆத்மா சாந்தியடையட்டும்.

Mrs. & Mr. K. குப்புசாமி
மானேஜர், கனரா பாங்க், சேலம்
Mr. K. Radhakrishnan, Madras
அன்பு சகோதரிகள் & all Relatives

---

அமரர் திரு ஆர். நடராஜ அய்யர் ஞாபகார்த்த நிதிக்குழு
திருச்சிராப்பள்ளி

## இ. ஆர். உயர்நிலைப்பள்ளிக் கட்டிட நிதிக்காக

திருச்சி டவுன் நேஷனல் உயர்நிலைப்பள்ளி மைதானத்தில்
30-5-74 வியாழக்கிழமை முதல் 8-6-74 சனிக்கிழமை முடிய

திருச்சிக்கு முதன்முறை விஜயம் செய்யும்

ஸ்ரீ உ. வே. முக்கூர் லக்ஷ்மீ நரசிம்மாச்சாரியார் அவர்களால்

**ஸ்ரீமத் ராமாயணப் பிரவசனம் நடைபெறும்**

அனைவரும் வந்திருந்து, தங்களது ஆதரவை நல்கிக் கட்டிட நிதிக்குத் தங்களால் இயன்ற அளவு பொருளுதவி செய்யும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

(நன்கொடைகளுக்கு வருமான வரிச் சலுகை அளிக்கப்பட்டிருக்கிறது)

வெளியூர் அன்பர்கள் கீழ்க்கண்ட முகவரிக்குத் தங்களுடைய அன்பளிப்பை அனுப்பும்படி கோரப்படுகிறார்கள்.

T. M. நரசிம்மன், காரியதரிசி
நடராஜ அய்யர், ஞாபகார்த்த நிதிக்குழு
E. R. உயர்நிலைப்பள்ளி, திருச்சிராப்பள்ளி - 2

அருகே உள்ள ஒரு நட்சத்திரத்தை அடைய எண்பது லட்சம் ஆண்டுகள் ஆகும். இறைவனது சிருஷ்டியில் இந்தப் பிரபஞ்சமானது இவ்வளவு பெரிதாக இருக்கும்போது நமது உலகம் அணு அத்தனையாகச் சிறுத்துப் போகவில்லையா ? இந்தச் சின்னஞ்சிறு உலகை, 'உங்கள் தேசம்', 'எங்கள் நாடு' என்று தனித் தனியே பலரும் பாகம் பிரித்துக் கொண்டு ஆள்வதும் ஒருவர் பிரதேசத்துக்கு மற்றொருவர் ஆசைப்பட்டுப் போர் தொடுப்பதும் எவ்வளவு அபத்தம்? எல்லையற்ற பெரு வெளியில் விண்கலத்தை விரையச் செய்யும் மனிதன் எல்லைப் போராட்டம் நடத்துவது எவ்வளவு அர்த்தமற்ற விஷயம் ?''

''உண்மைதான் அனு! ஆனால், அண்ட சராசரத்தைப் படைத்த அதே ஆண்டவன்தான் மனிதனுக்கு ஐம்புலன்களைத் தவிர ஆறுவதான பகுத்தறிவைத் தந்து அதற்கும் மேலே மனம் என்பதாகவும் ஒன்றை வழங்கியிருக்கிறான். ஞானியாக இருந்தால் ஒழிய அறிவு ஒப்புக் கொள்வதையெல்லாம் மனம் ஏற்றுக் கொண்டுவிடுவதில்லை. முதலில் தன் குடும்பத்தைப்பற்றி எண்ணுவதே சராசரி மனித மனத்தின் இயல்பு. தன் வீடு, தன் தெரு, தன் ஊர், தன் தேசம் என்று படிப்படியாக அரவணைத்துச் சென்று பக்குவப்பட்ட மனம்தான் கடைசியில் ஒரே உலகம்—அது தன் உலகம் என்ற தத்துவத்தைப் புரிந்து கொள்ளும். இதற்கு அடிப்படையான குடும்பப் பாசமும் பிரதேசப் பற்றும்கூட மிகவும் அவசியம்தான். அவை இல்லாது போனால் மனிதனுக்கு உழைக்கவும் சம்பாதிக்கவும் வாழ்க்கையில் முன்னேறவும் தோன்றாது. சோம்பல் மிக பைத்தியக்காரனைப் போல் அலைந்து கொண்டிருப்பான்.''

இவ்வாறு கூறிய தனஞ்செயன், 'ஏன் அனுபமா இந்தியாவுக்கு மைக்கேலை அழைத்து வரச் சம்மதித்ததற்கே இந்தக் குடும்பப் பாசம் தேசப் பற்று எல்லாம்தானே காரணம் ? 'ஒரே உலகம்' என்ற தத்துவம் இவனை முழுமையாக ஆட்கொண்டிருந்தால் இவன் ஏன் புறப்பட்டு வந்திருக்கப் போகிறான் ?' என்று எண்ணினான். ஆனால் மைக்கேல் எதிரே இதனை அவன் வாய்விட்டுக் கூறவில்லை.

# 40. திட்டத்தின் உச்ச கட்டம்

கெய்ரோ விமான நிலையத்தில் சில நிமிஷங்கள் இறங்கி இருந்துவிட்டு மைக்கேலும் தனஞ்செயனும் மீண்டும் விமானத்தினுள் ஏறியபோது அனுபமா முழுக்க முழுக்க இந்தியப் பெண்ணாக உருமாறிப் போயிருந்தாள்.

அவள் கையோடு கொண்டு வந்திருந்த சிறிய பெட்டியில் ஒரு புடவையும் ஜாக்கெட்டும் இதற்காகவே தயாராய் வைத்திருந்திருக்கிறாள் என்பதைப் புரிந்துகொண்ட தனஞ்செயன், ''அடுத்தாற்போல் பம்பாயில்தான் விமானம் தரை தட்டும் என்பதால் இந்த உடை மாற்றமா ?'' என்றான்.

''ஆமாம்; உபசரணைப் பெண்கள் ரொம்ப நல்ல மாதிரியாய் இருந்தார்கள். விமானத்தில் அவர்களுக்கென்று ஏற்பட்ட சிறிய தனி அறையில் என்னை உடை மாற்றிக் கொள்ள அனுமதித்தார்கள்'' என்றாள் அனுபமா. ''எப்படி இருக்கிறது ? சரியாக உடுத்தியிருக்கிறேனா ? அல்லது பம்பாய்ப் பெண்கள் பார்த்துச் சிரிக்கும்படி அணிந்திருக்கிறேனா ?''

''அவர்கள் ஏன் உன்னைப் பார்த்துச் சிரிக்கப் போகிறார்கள் ? லுங்கியும் ஸ்ட்ரெச் பாண்டும் பெல்பாட்ஸூம் அணியும் அவர்களுக்குப் புடவை உடுத்தவே மறந்து போயிருக்கும். நீ அவர்களுக்குக் கற்றுத் தரலாம்!''

சிரிப்பினூடே அவன் அனுவின் சிங்காரத்தை அணு அணுவாக ரசித்தான். பாரிஸ் நைட் கிளப் ஒன்றில் அவளும் மைக்கேலும் இணை சேர்ந்து மேனாட்டுப் பாணியில் நடனமாடியபோது அவனுக்கு ஏற்பட்ட மனக் கலக்கமெல்லாம் இப்போது கரைந்துருகிப் போய்விட்டது. முழுக்க முழுக்க அமெரிக்க நாகரிகப் பண்பாட்டிலேயே வளர்ந்து மங்கையாக மலர்ந்த அவள், தன் மனம் கவர்ந்தாலும் வாழ்க்கையைப் பகிர்ந்துகொள்வது என்று ஏற்படும் போது ஒருவரோடு ஒருவர் ஒத்துப் போக முடியுமா என்று ஏற்பட்ட ஐயப்பாடு இப்போது எங்கோ எட்டாத் தொலைவுக்குச் சென்று விட்டது. பாம்பு சட்டையை உரிப்பது எவ்வளவு சர்வ சாதாரணமோ, அப்படி இவள் மேல்நாட்டு நாகரிகத்தை உரித்துப் போட்டு விட்டு இந்தியப் பண்பாட்டில் ஒன்றிவிடக்கூடியவள் என்று கண்டான்.

இந்த எழில் குவியலை எட்ட நின்று கூடப் பார்க்க முடியாதபடி பம்பாயில் பிரிந்து செல்ல வேண்டும் என்று நினைவு வந்ததும் அவன் உள்ளம் உறைந்தது. சிறிது காலம்தான்; மீண்டும்

அவர்களைச் சந்திக்கும் கட்டமும் திட்டத்தில் இருந்தது. ஆனால் அந்த இடைவெளியை — அனுபமா என்னும் அழகுத் தத்துவத்தைப் பிரிந்து வாழ்கிற நாட்களை — எப்படிச் சகிப்பது? அதே சமயம் மைக்கேல் அவளுடன் நெருங்கி உறவாடிக் கொண்டிருப்பதை எப்படிப் பொறுப்பது?

சற்று முன்னால்தான் அஷ்டசரா சரத்தின் முன் உலகமே ஒரு பொருட்டல்ல என்று அனுபமா அறிவுரை வழங்கினாள். ஆனால் மனித மனம் அதையெல்லாம் எங்கே ஏற்கிறது? நான், தனது என்ற ஆசைதான் மேலோங்கிப் பொறுமையையும் கிளப்புகிறது! தனஞ்செயன் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான். 'அள்ளி மாளாத இந்த அழகைப் பருகித் தணியாத தாகத்துடன் இருக்கும் நான் விட்டுக் கொடுக்கவா செய்வேன்? ஒரு நாளும் நடக்காது! பிரபஞ்சத்தையே சீதனமாகத் தருவதானாலும் வேண்டாம்!'

''வெகுசீக்கிரம் உங்களை நான் பிரிய வேண்டியிருக்கும்'' என்றான் தனஞ்செயன். ''பம்பாயிலிருந்து புறப்படும் முதல் விமானத்தில் நான் தில்லி செல்கிறேன். நீங்கள் எலிஃபெண்டா குகைகள், ஜெய்ப்பூர் அரண்மனைகள், டில்லி செங்கோட்டை, தாஜ்மஹால், காசி, கல்கத்தா, புவனேசுவரர், கொனாரக் சூரியன் கோயில், சென்னையில் மகாபலிபுரம், மதுரை மீனாட்சி கோயில், கன்யாகுமரி, கேரளத்தின் கோவளம் கடற்கரை என்று ஒவ்வொன்றாகப் பார்த்து ரசித்துக்கொண்டு ஆனந்தமாகச் சுற்றுப் பயணத்தில் ஈடுபடுவீர்கள். நான் காரியாலயம் சென்று பலவீனம் அடைந்திருக்கும் இந்தியப் பொருளாதாரத்துக்கு அந்நியச் செலாவணி டானிக் சம்பாதித்துக் தருவது பற்றி மறுபடியும் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும்!'' — அலுத்துக் கொள்வது போலவும் பொறுமை எட்டிப்பார்க்கவும்பேசினான்.

அவர்கள் செல்லுமிடமெல்லாம் தான் போகாவிட்டாலும் தனது டி. எம். ஐ. தோழர்களில் யாரேனும் ஓரிருவர் அவர்கள் அறியாதவாறு சதா பின்தொடர்ந்து சென்று கண்காணித்துக் கொண்டிருப்பார்கள்; அவர்கள் மூலம் தனக்கு அனுபமா பற்றிய செய்திகள் அடிக்கடி வந்து கொண்டிருக்கும் என்ற எண்ணம் சற்று ஆறுதல் அளித்தது தனஞ்செயனுக்கு.

''டில்லிக்கு நீங்கள் வரும்போது அவசியம் என் வீட்டுக்கு வாருங்கள்'' என்று கூறி விலாசத்தையும், ஃபோன் எண்ணையும் எழுதித் தந்தான்.




கல்கத்தாவில் மின்வெட்டு எவ்வளவு தீவிரமாக இருக்கிறது என்பதை உணர்த்த 'அமிர்த பஜார் பத்ரிகா' இப்படி ஒரு மின்னுபகரணக் கடையைக் கார்ட்டூன் போட்டுக் காட்டியிருக்கிறது. - மாலி.

---

வீட்டில் அவர்களை வரவேற்பதில் சங்கடம் ஏதுமில்லை. நீட்டி முழக்குவதானால் 'டிபார்ட்மெண்ட் ஆஃப் மிலிடரி இன்டலிஜென்ஸ்' எனப்படும் டி.எம்.ஐ. நிறுவனத்தைச் சேர்ந்தவன் அவன் என்பது அவன் தங்கைக்கு மட்டும்தான் தெரியும். சாந்தி அந்த இரகசியத்தை வெளியிடவே மாட்டாள்.

தனஞ்செயன் பேசக் கேட்டதும் அனுபமாவுக்கு ஒரு பயங்கரமான சதித் திட்டத்தின் உச்ச கட்டத்தைத் தான் நெருங்கிக் கொண்டிருப்பது உறைத்தது. அதுவரை அவன் அருகில் இருந்ததால் ஓரளவு தைரியமாகவே செயல்பட்டவள் இனி தான் தனித்திருந்து மைக்கேலிடம் தொடர்ந்து நாடகமாட வேண்டும் என்பதை எண்ணிப் பார்த்த போது மிரண்டாள்.

கலக்கத்தைக் கண்களிலே கண்டவன் புன்னகையுடன் புருவங்களை உயர்த்தி இலேசாகத் தலையாட்டித் தைரியமூட்டினான், 'எல்லாம் சமாளித்துக் கொள்வாய்; கவலைப்படாதே' என்று உணர்த்துவது போல.

''பம்பாயைச் சென்றடைய இன்னும் இரண்டு மணி நேரம் ஆகும்போல் இருக்கிறதே!'' என்றான் மைக்கேல். ''அதுவரை விண்வெளி விஞ்ஞானத்தில் இந்தியா இதுவரையில் அடைந்துள்ள முன்னேற்றங்களைப் பற்றிச் சொல்லேன். கேட்போம்!''

இப்போது அனுபமா மட்டுமல்ல, தனஞ்செயனேகூடக் கலங்கித்தான் போனான்! 'வாய் வார்த்தையாகப் பேசுகிறானா மைக்கேல், அல்லது தன்னை ஆழம் பார்க்கிறானா?' என்ற குழப்பம் அவனை ஆட்கொண்டது. (தொடரும்)

# வேலையற்ற வாலிபர்கள்—
# BHEL நிறுவனத்தில் நடப்பது என்ன?
# உண்மைகள் அம்பலம்!

**லால்குடி பாலசுப்ரமணியத்தின் இந்த உண்மைக் கதையைப் படியுங்கள். இந்தியாவின் வளர்ச்சிக்கு இளைய சமுதாயத்தின் ஆக்கத் திறன் முழுமையாகப் பயன்படும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பது விளங்கும்.**

எஸ்.எஸ்.எல்.ஸி.வரை படித்த பாலசுப்ரமணியன், 10 ஆண்டுகளுக்கு முன் BHEL நிறுவனத்தில் பணியாளராகச் சேர்ந்தார். வாழ்க்கையில் உயரவேண்டும் என்ற அவரது ஆவலுக்கு ஊக்கமளித்து, வழிகாட்டியது BHEL. நவீன முறைகளில் தொழில் நுட்பத் துறையில் அவருக்குத் தீவிர பயிற்சியளித்து, அவரை ஒரு தேர்ந்த தொழிலாளியாக்கி விட்டது. இன்று அவருடைய ஊதியம் நான்கு மடங்கு அதிகரித்துள்ளது. ஒளிமயமான எதிர்காலம் அவரை வரவேற்கிறது. இதுபோல் அரும்பாடு படும் ஆயிரக்கணக்கான BHEL தொழிலாளர்கள், தாம் வேறெந்த நாட்டினருக்கும் திறமையில் குறைந்தவர்கள் அல்ல என்பதை நிரூபித்து விட்டனர். மின்சாதனக் கருவிகள் தயாரிக்கும் மிகச் சில நாடுகளில் இந்தியா ஒன்ருகத் திகழ்வதே இதற்கு மாபெரும் சான்று.

**எத்தினமும் மே தினமே—BHEL நிறுவனத்தில்**

BHEL ஊழியர்களுக்கு மேற்படிப்புக்கும், விசேட தொழிற்பயிற்சி பெறவும் ஏராளமான வாய்ப்பு கிட்டுகிறது. அவர்கள் சாதனைகளுக்குப் பரிசு பணமாகவும், வேலை உயர்வுகளாகவும் கிடைக்கிறது. தொழிலாளிகள் முக்கியத்துவத்தை மனத்தில் இருத்தி, எத்தினமும் மே தினமே — தொழிலாளர் தினமே— என்ற இக்கொள்கைதான் வரலாறு காணுத இந்த வெற்றியைக் கொணர்ந்திருக்கிறது.

**ஊழியர் நலனுக்காகச் செலவிடப்படும் தொகை — ரூ. 10 கோடிக்குமேல்.**

ஊழியர்களுக்கு வேலையில் முன்னேறவும், மகிழ்ச்சிகரமாக குடும்பம் நடத்தவும் BHEL எல்லா வசதிகளும் அளிக்கிறது.

இந்தியாவிலேயே முதன்முறையாக ஓர் 'இருதலை உடன்பாடு' ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. ஊழியர்களும், நிர்வாகமும் தாமாகவே முன்வந்து, மூன்ரும் மனிதர் தலையீடின்றி இந்த உடன்பாடு செய்துகொண்டனர். அகில இந்திய அளவில் 'நிர்ணயிக்கப்பட்ட ஊதிய' நிலை ஏற்பட இது ஒரு மகத்தான ஆரம்பம்.

ஊழியர்கள் மகிழ்ச்சிகரமாக குடும்பம் நடத்தவும், வசதியாக வாழவும் தலை சிறந்த திட்டங்கள் அமுலாக்கப் பட்டுள்ளன. பொறியியல் நிபுணர்கள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டு, சக்தித் துறையில் மிக நவீன தொழில் நுட்பங்களைக் கற்றுத் திரும்புகின்றனர்.

**இரண்டு ஆண்டுகளில் ஒருமணி நேரம்கூட உற்பத்தி தடைப்பட வில்லை.**

உலகத்தில் எந்த நாட்டுக்கும் ஈடாக, நவீன சக்தி சாதனங்கள் தயாரிக்கிறது BHEL. ஆண்டொன்றுக்கு ஒவ்வொரு தொழிலாளியும் அளிக்கும் உற்பத்தி மதிப்பு, சராசரியாக 1973-74ல் ரூ. 53,300 ரூபாயாக உயர்ந்துள்ளது.

முந்தைய வருடங்களில் இதே மதிப்பு வருமாறு: 1971-72ல் ரூ. 29,000, 1972-73ல் ரூ. 36,600. மே தின உணர்வு எவ்வளவு தூரம் எங்கள் ஊழியர்களிடம் பரவியுள்ளது என்பதற்கு இதோ இன்னுமொரு சான்று

*— கடந்த இரண்டு ஆண்டுகளில் எங்கள் நான்கு தொழிற்சாலைகளிலும் ஒரு மணி நேரம் கூட உற்பத்தி தடைப்படவில்லை!*




**BHEL — சக்தி வாய்ந்த எதிர்காலம், நலம் கொழிக்கும் எதிர்காலம்.**

போபால், ஹரித்வாரம், ஹைதராபாத், திருச்சி — இந் நான்கு இடங்களில் அமைந்துள்ள BHEL தொழிற்சாலைகளில் பணியாற்றுபவர்கள் சுமார் 45,000 பேர்கள். இவர்களின் அயராத உழைப்பு இந்தியாவிற்கு சக்தித் துறையில் தன்னிறைவு அளிப்பதுடன், இன்னும் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்புகள் உண்டாக்குவது திண்ணம்.

இவர்கள் உதவியுடன், மக்கள் சக்தியை ஆக்க சக்தியாக மாற்ற BHEL தொடர்ந்து அரும்பாடு படும்.



**மக்களுக்கு சக்தி**

பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
18-20 கஸ்தூர்பா காந்தி மார்க், புதுடில்லி 110 001

SAA/BHEL/1369



# மலைக்க வைத்த மர்மங்கள் 8

மேஜை டிராயர்கள் தாறுமாறாகக் கிடந்தன. அறையின் கண்ணாடி ஜன்னல் உடைந்து கிடந்தது. ஜன்னல் வழியாகப் பார்த்தால் ஏணி ஒன்று சுவரில் சாத்தியிருந்தது.

திருடர்கள் நானூறு சவரன் பெறுமானமுள்ள நகைகளைத் திருடிக் கொண்டு போய் விட்டார்கள் என்று தெரிந்தது. நல்லவேளை! பக்கத்தில் உள்ள இரும்புப் பீரோவை அவர்கள் திறக்கவில்லை. திறந்திருந்தால் அதிலுள்ள முப்பதாயிரம் சவரன் மதிப்புள்ள நகைகள் போயிருக்கும்.

ஸர் கிரஹாம் உடனே பக்கத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் அனுப்பி வைத்தார். அங்கிருந்த இன்ஸ்பெக்டர் கெட்டிக்காரர். அவர் என்ன விஷயம் என்று விசாரிக்க கிரஹாமுடைய மாளிகைக்கு வராமல், தந்தி மூலம் எல்லாப் போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் தகவல் அனுப்பி வைத்து ஆங்கங்கே காவல் வைக்கும்படி சொன்னார்.

சில மணி நேரங்களுக்குப் பிறகு, பத்து மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு தெருவில் இரண்டு போலீஸ்காரர்கள் போய்க் கொண்டிருந்தபோது எதிரே நான்கு பேர்கள் வருவதைக் கண்டார்கள்.

''நில்லுங்கள்! நீங்கள் யார்?'' என்று போலீஸ்காரர்கள் அவர்களைக் கேட்டது தான் தாமதம். அவர்கள் தங்கள் கையிலிருந்த துப்பாக்கிகளால் போலீஸ்காரர்களைச் சுட்டுக் காயப்படுத்திவிட்டு ஓடி விட்டார்கள்.

ஓடினவர்கள் பக்கத்திலுள்ள வயலில் புகுந்து, ரயில்வே லைன் வழியாகப் பக்கத்து ஊரை அடையும் சமயம், இன்னொரு போலீஸ்காரர் எதிரில் தென்பட அவரையும் சுட்டுக் காயப்படுத்தி விட்டு ஓடினார்கள்.

ஸர் கிரஹாமின் நகைகள் போனதைப் பற்றிக் கூடப் போலீஸார் அத்தனை கவலைப் படவில்லை. மூன்று போலீஸ்காரர்களைச் சுட்டுக் காயப்படுத்திய அவர்களை எப்படியாவது கண்டுபிடித்தாக வேண்டும் என்று போலீஸார் தீவிரமானார்கள். ஆனால் கடைசியில் அவர்களைப் பிடித்தது போலீஸ்காரர்கள் அல்ல. அவர்களைப் பிடித்தது யார் என்பது தான் கதை.

அடுத்த இருபத்திநான்கு மணி நேரத்துக்குள் நால்வரில் ஒருவன், மற்ற மூன்று பேரையும் விட்டு விட்டுத் தனித்து எங்கோ சென்று விட்டான் என்று தகவல் கிடைத்தது. அந்த நாலாவது ஆளைப் பற்றிப் பின்னர் தகவல் கிடைக்கவேயில்லை.

அடுத்த நாள் காலை இந்த மூவரும் இன்னும் இருபது மைலுக்கு அப்பாலுள்ள பீனம்ப்டன் என்னும் ஊரில் காணப்பட்டார்கள். கிராமப் பக்கங்களில் இருந்தால் யாரும் கண்டுகொள்வார்கள், ஆகவே எப்படியாவது லண்டன் நகரத்தை அடைய வேண்டும் என்று அவர்கள் தீவிரமாக இருந்தார்கள். ஆனால் பக்கத்து ரயில்வே ஸ்டேஷனில் சென்று விசாரித்ததில் அன்றைய ரயில் போய்விட்டது, இனி மறுநாள் காலையில்தான் வண்டி என்று தெரிய வந்தது.

ஆகவே அன்றிரவை அந்தக் கிராமப் புறத்தில்தான் கழிக்க வேண்டும். ஆனால் ஏக பசியாக இருக்கிறதே, என்ன செய்வது?



# மூன்று உருவங்கள்

நாடோடி

அந்தக் கிராமவாசிகளுக்குத் தங்களைப் பற்றிய தகவல் போய்ச் சேர்ந்திருக்காது. அதோடு அந்தக் கிராமத்தில் போலீஸ்காரர்களும் இருக்க மாட்டார்கள் என்ற தைரியத்தில் அந்த மூவரும் அந்தக் கிராமத்தின் ஹோட்டலை நோக்கி நடந்தார்கள். இரண்டு பேர் உள்ளே நுழைய ஒருவன் வாசலில் காவலுக்கு நின்றான்.

ஆனால் ஸர் கிரஹாம் வீட்டில் நகைகள் களவு போனது, மூன்று போலீஸ்காரர்கள் சுட்டுக் காயப்படுத்தப்பட்டது ஆகிய விஷயங்கள் அந்தக் கிராமத்தாருக்கு எப்படியோ போய்ச் சேர்ந்திருந்தன. ஆகவே புதிதாக மூன்று பேரைக் கண்டதும் அவர்கள் அந்தக் கிராமத்துப் போலீஸ்காரருக்கு இரகசியமாகத் தகவல் சொல்லி அனுப்பினார்கள்.

ஆனால் போலீஸ்காரர் வருவதற்குள் அந்த மூன்று பேரும் விஷயத்தைப் புரிந்துகொண்டு விட்டார்கள். ஆகவே அவர்கள் உடனே ஹோட்டலை விட்டு வெளியே கிளம்பி விட்டார்கள். வழியில் அந்தக் கிராமத்துப் போலீஸ்காரர் தென்படவே அவரைச் சுட்டுக் கொன்றுவிட்டு அப்பால் சென்றார்கள்.

போலீஸ்காரரை அவர்கள் சுட்டுத் தள்ளி விட்டதால் அடுத்த நாள் காலை ரயில் வண்டி புறப்படும்வரை அவர்கள் அங்கு இருப்பது என்பது முடியாத காரியம். ஆகவே பத்து மைல் நடந்து இரவு பத்தரை மணிக்குப் பென்ரித் என்னும் ஸ்டேஷனை அடைந்தார்கள். நல்ல வேளை! அங்கு ஒரு குட்ஸ் வண்டி லண்டனை நோக்கி அப்பொழுதுதான் கிளம்பிக் கொண்டிருந்தது. மிகவும் நல்லதாகப் போயிற்று என்று இவர்கள் ஓடிப் போய் ஒரு பெட்டியில் ஏறி, அதில் இருந்த படுதாவால் தங்களை மூடிக் கொண்டார்கள்.

அந்தக் குட்ஸ் வண்டியின் 'கார்ட்' காடஸ் என்பவர் வண்டி கிளம்பியதும், எல்லாம் சரியாக இருக்கிறதா என்று கவனிப்பதற்காக என்ஜின் பக்கம் பார்த்தார். அப்பொழுது இருட்டில் மூன்று உருவங்கள் குட்ஸ் வண்டியின் பெட்டி ஒன்றில் ஏறி ஒளிந்து கொள்வதை அவர் கண்டு விட்டார்!

ஸர் கிரஹாம் வீட்டில் நகைகள் திருடப்பட்டதைப் பற்றியும் மூன்று போலீஸ்காரர்கள் சுட்டுக் காயப்படுத்தப்பட்டதைப் பற்றியும் அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆகவே இந்த மூவரும் அதில் சம்பந்தப்பட்டவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர் தீர்மானித்தார். அப்படி இல்லாவிட்டாலும் அந்த மூவரும் அப்படித் திருட்டுத்தனமாகக் குட்ஸ் வண்டியில் ஏறியது தவறு. அவர்களைப் பிடித்துத்தான் ஆகவேண்டும். எப்படிப் பிடிப்பது?

ரயில் அப்பொழுது ஒரு நிர்மானுஷ்யமான பிரதேசத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தது. தம்மிடம் உள்ள பிரேக்கைக் கொண்டு அவர் ரயிலை நிறுத்தலாம். ஆனால் அப்படி நிறுத்தினால் என்னவோ, ஏதோ என்று என்ஜின் டிரைவரும் அவருடைய உதவியாளரும் கீழே இறங்கி வருவார்கள். அப்பொழுது அந்த மூன்று பேரும் அவர்களைச் சுட்டுக் கொன்று விடலாம்.

சீக்கிரமே ரயில் ஒரு சிக்னலைத் தாண்டும் என்று அவருக்குத் தெரியும். ஆகவே சிக்னல் அறையில் இருக்கும் ஆளிடம் விஷயத்தைத் தெரிவித்தால் அவன் அடுத்த ஜங்ஷனுக்குத் தகவல் கொடுப்பான். அங்கு போலீஸ்காரர்கள் ரயிலின் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்து அந்த மூவரையும் பிடித்துக் கொள்வார்கள். ஆனால் அவர் தம் கைகளையும் தலையையும் ஆட்டிச் சொன்ன விஷயத்தைச் சிக்னல் அறையில் இருந்த அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இதற்கு அடுத்து ஒரு சிறு ரயில்வே ஸ்டேஷன் வரும். ஆனால் வண்டி அங்கு நிற்காது. ஆகவே விஷயத்தை ஒரு சிறு காகிதத்தில் எழுதி, அதைப் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த ஸ்டேஷன்மாஸ்டரை நோக்கித் தூக்கி எறிந்தார். ஆனால் அதை ஸ்டேஷன் மாஸ்டர் கவனிக்கவில்லை!

இதற்குப் பிறகு பல ஸ்டேஷன்கள் வந்தன. அங்கெல்லாம் வண்டி நிற்காது. கடிதங்கள் எழுதித் தூக்கி எறிந்தும் பயனில்லை. முந்தைய





**வெற்றி சாசுவதமல்ல!**

ஜோ ஃப்ரேசியர், ஜோ ரோமன், கென் நார்ட்டன் போன்ற இடும்பர்களை வென்ற பீமன் இவர் தான். இன்றைய உலக ஹெவி வெயிட் பாக்ஸிங் சாம்பியனான அமெரிக்கர் ஜார்ஜ் போர்மன் கூறுகிறார்: ''மூன்று, நான்கு வருஷங்களுக்கு மேல் யாரும் தொடர்ந்து உலக பாக்ஸிங் சாம்பியன் பட்டம் வகிக்கு மாறு விடக் கூடாது. எப்பொழுதும் வெற்றி உச்சியிலே இருப்பது என் எண்ணமல்ல. என்னைவிட இளைஞர்கள் கடுமையாக உழைத்தால் என்னை ஜெயித்து வெற்றிச் சிகரத்தை அடைந்து விடலாம்!''

---

கடிதத்துக்கு நேர்ந்த கதிதான் இவருக்கும் ஏற்படும்.

திடீரென்று காடசுக்கு ஒரு ஞாபகம் வந்தது. இன்னும் சிறிது நேரம் போனால் எதிரே ஒரு குட்ஸ் வண்டி வரும். அதைத் தம்மிடம் உள்ள சிவப்பு விளக்கைக் காட்டி நிறுத்தி, தம் வண்டியையும் தம்மிடம் உள்ள பிரேக்கினால் நிறுத்தினால் இந்த வண்டியில் மூன்று, அந்த வண்டியில் மூன்று ஆக ஆறு பேரும் சேர்ந்து அந்த மூன்று பேரை வளைத்துப் பிடித்துவிடலாம். ஆனால் வண்டி நின்றதும், அந்த மூன்று பேரும் தப்பித்துக்கொண்டு ஓடிவிட்டால்? ஆக இந்த யோசனையும் பிரயோசனமில்லை.

காடசுக்கு மற்றொரு யோசனை தோன்றியது. விஷயத்தை விளக்கி அவசரம் அவசரமாக ஒரு கடிதம் எழுதினார். அதைத் தம் டிபன்பாக்ஸில் வைத்தார். எதிரே குட்ஸ் வண்டி வந்ததும் தம் சிவப்பு விளக்கை ஆட்டினார். அந்த வண்டியின் வேகம் குறைந்தது. தம்மிடம் உள்ள பிரேக்கை மெதுவாக இயக்கித் தம் வண்டியின் வேகத்தையும் குறைத்தார். தம் பெட்டிக்கு எதிராக எதிர்த்த குட்ஸ் வண்டியின் என்ஜின் வந்ததும், தம் டிபன்பாக்ஸை இன்ஜினை நோக்கித் தூக்கி எறிந்தார். பிறகு தம் வண்டியை வேகமாகச் செல்ல விட்டார்.

தம் வண்டி அடுத்த ஜங்ஷன் போய்ச் சேர்வதற்குள் எதிர்த்த குட்ஸ் வண்டி டிரைவர் கடிதத்தைப் பார்த்து, வழியில் உள்ள ஏதாவது ஒரு ஸ்டேஷனிலிருந்து தந்தி மூலம் தகவல் கொடுத்து விடுவார், போலீஸ்காரர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள் என்றுதான் காடஸ் நினைத்தார்.

ஆனால் என்ன ஏமாற்றம்! அந்த ஜங்ஷனில் வண்டி வந்து நின்றது. ஆனால் போலீஸைக் காணவில்லை. காரணம், எதிர்த்த குட்ஸ் வண்டியின் டிரைவர் டிபன்பாக்ஸில் இருந்த கடிதத்தைப் படித்தும், வழியில் தந்தி கொடுக்கும்படியான ஒரு ஸ்டேஷனும் வரவில்லை. அதோடு அவர் தம் குட்ஸ் வண்டியை மெயின் லைனை விட்டு அடுத்த லைனில் நிறுத்தி வைத்த பிறகுதான் எதுவும் செய்ய முடியும். ஆனால் அதற்குள் காடஸின் வண்டி ஜங்ஷனை அடைந்து விட்டது.

காடஸ் மனம் தளரவில்லை. ரயில் நின்றதும் கீழே குதித்து, மூன்று பேரும் ஒளிந்திருந்த பெட்டியைப் பார்த்தார். அங்கு ஓர் அசைவும் காணப்படவில்லை. ஆகவே மூன்று பேரும் தூங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்று தீர்மானித்து, ஜங்ஷனில் இருந்த சில ஆட்களிடம் விஷயத்தை இரகசியமாகச் சொல்ல, எல்லோரும் கையில் கிடைத்த குச்சியையோ கழியையோ ஏந்தி அந்தப் பெட்டியைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''வெளியே வா'' என்று காடஸ் கத்தினார்.

இவர்களில் ஒருவர் கையிலாவது துப்பாக்கி கிடையாது. ஆனால் அந்த மூவரோ மெள்ளத் தலையை நீட்டி இவர்களை நோக்கிச் சுட ஆரம்பித்தார்கள்.

சுற்றி நின்றவர்கள் பெட்டிக்கு அடியில் அவ்வப்பொழுது பதுங்கிக் கொள்ள முடிந்ததால் யாருக்கும் துப்பாக்கியினால் காயம் ஏற்படவில்லை. கடைசியில் வெகு சாமர்த்தியமாக அவர்களைக் கழிகளினால் அடித்துப் பிடித்தார்கள். இரண்டு பேரைப் பிடிப்பதற்குள் மூன்றாம் ஆள் தப்பிவிட்டான்.

அடுத்த நாள் ஓர் ஆள் இன்னொரு குட்ஸ் வண்டியில் ஒளிந்து கொண்டிருந்தபோது அகப்பட்டான். ஆனால் இந்த மூவரும்தான் ஸர் கிரஹாம் வீட்டில் கொள்ளை யடித்தவர்கள், மூன்று போலீஸ்காரர்களைச் சுட்டுக் காயப்படுத்தியவர்கள், போலீஸ்காரனைச் சுட்டுக் கொன்றவர்கள் என்று நிரூபிக்க வேண்டுமே!

'எப்படி நிரூபிப்பது' என்று போலீஸார் திகைத்துக் கொண்டிருக்கையில் ஒரு வாரம் கழித்து ஒரு போர்ட்டர் குட்ஸ் வண்டி நின்ற ஜங்ஷனைச் சுத்தம் செய்து கொண்டிருக்கையில் குப்பையில் ஏதோ பளிச் சென்று தெரிய, என்னவென்று பார்த்தான். அது லேடி கிரஹாமின் வைரத் தோடு!

ஜங்ஷனுக்கு அப்பால் ஒரு நதி ஓடியது. அதன் கரையில் ஒரு நகை கிடைத்தது. பிறகு நதியின் அடுத்த கரையில் ஒரு தோல் பை கீழே கிடக்க, அதற்குள் மீதி நகைகள் கிடந்தன.

தப்பியோடிய மூன்றாவது ஆள் நகைகளை எடுத்துக் கொண்டு ஓடியிருக்கிறான் என்றும், அவற்றில் சில வழியில் விழுந்து விட்டன என்றும், அவனே நதியில் நீந்திப் போயிருக்கிறானென்றும், பிறகு நதியின் அடுத்த கரையில் அவன் சட்டைப் பையில் இருந்த தோல் பை தவறி விழுந்திருக்கிறதென்றும் தெரிந்தது.

மூன்று பேருக்கும் தண்டனை கிடைத்தது. அவர்களைச் சாமர்த்தியமாகப் பிடித்த கார்ட் காடசுக்கு ஐம்பது சவரன் இனாம் கிடைத்தது.

ESTD: 21-3-52.

# தபால் மூலம்

GOVT REGD: 3072.

# இலவசக் கல்வி போதனை

'D' குரூப் வகுப்புகள் ஆரம்பம்: 14-6-1974

ஆண்—பெண் இருபாலரும் 1974—75ம் வருட சர்க்கார் பல்கலைக்கழக தேர்வுகளில் தேர்ச்சிபெற உத்திரவாதத்துடன் மாதம் இரு முறை தபால் மூலம் பாடங்கள் அனுப்பி பயிற்சியளிக்கப்படும்.

1. S. V. B. A., B. Com., B. Sc., March 1975 (P. U. C.-இன்டர் தேறியவர்கள் தகுதி யுடையவர்கள்.) 2. B. L., M. A., M. Com., A. M. I. B. M. (பட்டதாரிகள் அருகதையுடையவர்கள். 3. ஆக்ரா—டில்லி—(கர்நாடக B. A., B. Com., B. Sc., (S. S. L. C., (அ) S. S. C. (ஆ) மெட்ரிக் தேறியவர்கள் கலந்து கொள்ளலாம். 4. போபால்—டெல்லி— ஆந்திரா—கர்நாடக் இன்டர் (S.S.L.C./S.S.C., மெட்ரிக் படித்தவர்கள் தகுதியுடையவர்கள்.) 5. A. C. B. I. (London) S. S. L. C. மெட்ரிக் தேறியவர்கள் தகுதியுடையவர்கள். 6. Account Text Exmns. I. M. C., (S. S. L. C., S. S. C. மெட்ரிக் தேறியவர்கள் தகுதியுடையவர்கள்.) 7. டெலிபோன் ஆபரேட்டர்—டெலிகிராப் ஒயர்லெஸ். 8. சென்னை—மதுரை—திருப்பதி மெட்ரிகுலேஷன். 9. சென்னை—மதுரை P. U. C. 10. தமிழ் வித்துவான்—புலவர் தேர்வுகள். 11. விவசாயம் 12. போஸ்ட்மேன். 13. போஸ்டல் கிளார்க். 14. கைத்தறி நெசவு. 15. அக்கவுண்ட்டன்ஸி. 16. கிராம மணியம்—கர்ணம். 17. சர்வீஸ் கமிஷன் (தமிழ் அண்ட் ஆங்கிலம் அக்டோபர்-74) 18. S.S.L.C. (8-ஆம் வகுப்பும் அதற்கு மேலும் படித்தவர்கள் தகுதியுடையவர்கள். 19. Com. Inter, D. Com., B. Com., B. Com. (Hons) M. Com., S. S. L. C. அல்லது P. U. C. தேறியவர்களும்—தவறியவர்களும் 1975 பிப்ரவரி தேர்வில் கலந்து கொள்ளலாம். 20. பேசிக் ஆங்கிலம். 21. பிரி—மெட்ரிக். 22. ஹோமியோபதி 23. கம்பாவுடர். 24. டெல்லி ஹையர் செகண்டரி தேர்வு (X, XI படித்தவர்கள் தகுதியுடையவர்கள்.)

முழு விவரங்களுக்கு 25 பைசா தபால் தலையுடன் விண்ணப்பித்து நீங்கள் விரும்பும் வகுப்பில் சேர்ந்து பயிற்சிபெற உங்களை அன்புடன் அழைக்கின்றோம்.

"தமிழகத்தின் தனிப் பெரும் தபால் கல்வி ஸ்தாபனம்"

**ஸ்ரீ முருகன் டுடோரியல் இன்ஸ்டிடியூட்**

Affiliated by 1. A. & A. I. S. Educations 2. Com. University New Delhi

ரிஷிவந்தியம்-S. O. தென்னாற்காடு மாவட்டம், தமிழ்நாடு

---

கிளைகள்: ஸ்ரீலங்கா, மலேசியா, தென் ஆப்பிரிக்கா, மொரிஷஸ் & இந்தோனேஷியா

---

# மூல நோயை

முற்றவிடாமல்

நம்பிக்கையான

**ஹெடன்ஸா**

களிம்பு

உபயோகித்து

நிவாரணம்

அடையுங்கள்;

—ரண

சிகிச்சையையும்

தடுங்கள்

Bensons-2141 TAM



# கோகுலம்

(மாதம் இருமுறை)

தனிப் பிரதி 40 காசு

சந்தா விவரம்:

உள் நாடு:

ஆண்டுச் சந்தா: ரூ. 10/-
ஆறு மாதம்: ரூ. 5/-

இலங்கை:

ஆண்டுச் சந்தா: ரூ. 15/-
(இலங்கை நாணயப்படி)

இதர நாடுகள்:

ஆண்டுச் சந்தா: ரூ. 25/-

○

மானேஜர், 'கோகுலம்'
கல்கிப் பூங்கா, சென்னை-600031



**பத்மகிரீசன் - வசந்தா**

ஸ்ரீ டி. என் .ஏ. ராமன் ( of United Commercial Bank Calcutta ) அவர்கள் புத்திரி சௌபாக்கியவதி **வசந்தாவுக்கும்**, வி. ஆஞ்சநேயன் அவர்கள் சகோதரன் **வி. பத்மகிரீசனுக்கும்** ( *Chief Engineer, Great Eastern Shipping Co. Ltd., Calcutta*) 1-5-74 அன்று சென்னை தியாகராயநகர், ககன் விஹார் கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது. பல பிரமுகர்கள் நேரில் வந்து மணமக்களை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள்!

# தேவை

பிராமண ஜாதி சமையல்காரம்மாள் தேவை. மனுதாரின் யோக்யதாம்சத்தைப் பொருத்து மாதச் சம்பளம் ரூபாய் 75/- வரை கொடுக்கப்படும்.

புருஷனும் உடன் வேலைக்கு வருவதாயிருந்தால் அவருக்குத் தகுந்த வேலையும் ஏற்பாடு செய்யக்கூடும்,

விபரங்களுக்கு அடியிற்கண்ட விலாசத்திற்கு மனு செய்யவும்.

அலுவலக நிர்வாகி,

15, மகாராஜா சூர்யராவ் ரோடு,
சென்னை - 18

# வாலிப மிடுக்கோட வாழுங்க ஆனந்தமா!

நிஞ்சற வயசுலே ஓஞ்சு கிடப்பாங்களா? மூச்சுத் திணறினவனுக்கு முகூர்த்தம் போச்சு. உங்களுக்கென்ன? 'தம்' இல்லாமப் போகுமா. விரலை அசைச்சா வீரியம் துள்ளிவரும்: வெள்ளிக் காசுக் கணக்கா இந்தாங்க ஒகாஸா. இந்தக் காலத்து டானிக் மாத்திரை. நாளுங்க நழுவினாலும் நாடி தளராத தெம்புக்கு: ஒகாஸா. சளைக்காம பல காலம் சிலம்பம் வீசி வாழலாம். ஜமாயுங்க—மேளதாளத்தோட.

வல்லவராய் வாழ்வதற்கே

# ஒகாஸா

ஹார்மோ-பார்மா லிமிடெட், லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

ஆண்களுக்கு வெள்ளி நிற மாத்திரை— எல்லா முக்கிய மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்

OKASA CO.PVT.LTD., 12K Gunbow Street, P. B. No. 396, Bombay-400001



# வம்பு வாழ்க!

சீதா

"ஸிக்கிம் ராணி அமெரிக்காவுக்குப் போய் விட்டாளாமே?'' என்றாள் அத்தை.

''ராஜாவை விட்டுவிட்டா?'' என்றாள் அம்மா.

''டைவர்ஸுக்கு முதல் படியோ என்னவோ?'' என்றாள் அத்தை.

''இருக்கலாம். யார் கண்டது? அமெரிக்காவில்தான் டைவர்ஸும் மறு விவாகமும் சர்வ சகஜமாக நடக்கின்றனவே!'' என்றாள் அகிலாண்டம்மாள்.

''குழந்தைகளின் படிப்புக்காகப் போய் அமெரிக்காவில் தங்கி யிருக்கிறாள் என்று சொல்லிக் கொள்கிறார்கள்'' என்றாள் அன்ன பூர்ணம்மாள்.

''எவன் பெண்டாட்டி எங்கே போனால் என்ன உங்களுக்கு!'' என்று இரைந்தார் சங்கரன்.

இந்தச் சமயத்தில் அங்கு வந்து சேர்ந்த சாரு ''அப்பா நீயும்தான் தினமும் பேப்பரை முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரையில் படிக்கிறாய். இந்த மாதிரி 'நியூஸ்' எல்லாம் உன் கண்களில் படுகிறதா?'' என்று கேட்டாள்.

''இதெல்லாம் நியூஸா? — வம்பு'' என்றார் சங்கரன்.

''வம்புதான் அப்பா நியூஸ்!'' என்று சொல்லிக் கொண்டே எங்கிருந்தோ வந்து சேர்ந்தான் சுந்தர்.

''வம்பிலே இருக்கும் சுவாரஸ்யம் வேறு எதிலே இருக்கு'' என்றான் வேணு.

''வம்புப் பேச்சினால்தான் மனித சக்தி வீண் விரயமாகிறது என்று நம் பெரியவர்கள் எல்லாம் சொல்லியிருக்கா''என்றார் சங்கரன்.

''பெரியவா என்றவுடனே காஞ்சிப் பெரியவா ஞாபகம் வருகிறது. அவாளுடைய ஜெயந்திகூட அடுத்த வாரம் வருகிறது'' என்றாள் அன்னபூர்ணம்மாள்.

''இந்தத் தேசம் போகிற போக்கைப் பார்த்தால் எங்கே நம்ம பண்பாடு, கலாசாரம் எல்லாம் போய்விடுமோ என்று பயமாக இருக்கிறது. அந்தச் சமயத்தில் பெரியவாளை நினைக்கிறபோது நம்ம தர்மத்தைக் காப்பாற்ற 'இதோ இவர் இருக்கிறார்' என்று தைரியம் ஏற்படுகிறது'' என்றார் சங்கரன்.

''பெரியவா இளைஞர்களுக்கு எழும் சந்தேகங்களுக்குக் காலத்துக்கு ஏற்பப் பதில் சொல்லுகிறா'' என்றான் வேணு.

''அதே சமயத்தில் அவா நமது ஆசாரத்தையோ தர்மத்தையோ விட்டுக் கொடுக்காமல் சமாதானம் சொல்லுவதைக் கேட்கும் போதுதான் மெய்சிலிர்த்து விடுகிறது!'' என்றான் சுந்தர்.

''அப்பா! பூனாவிலே ஒரு செய்தி பார்த்தீர்களோ? மந்திர சக்தியால் நெருப்பு வரவழைத்தார்களாமே!'' என்றாள் சாரு.

''இந்த இருபதாம் நூற்றாண்டிலும் நமது மந்திரங்களுக்கு அவ்வளவு சக்தி இருக்கிறது என்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது'' என்றாள் ஹேமா.

''உலகில் அதிசயங்களுக்குக் குறைவேயில்லை. அப்படியிருக்க வீண் வம்புப் பேச்சில் காலத்தைக் கழிப்பானேன்?'' என்றார் சங்கரன்.

''முத்தொள்ளாயிரத்தில் ஒரு பாட்டு வருகிறது. 'ராஜா ஒருத்தியைக் காதலிக்கிறான்' என்று ஊரிலே வம்பு பேசுகிறார்களாம். அதைக் கேட்டு அந்த ஒருத்திக்கு அளவுக்கடங்காத சந்தோஷமாம். ராஜாவை என்னவோ தன்னால் அடைய முடியாது. ஊர் வம்புப் பேச்சிலேயாவது அவனுடன் சம்பந்தப்படுத்திப் பேசுகிறார்களே என்று சந்தோஷமாம்'' என்றாள் அத்தை.

''முத்தொள்ளாயிர மெல்லாம் படிக்கிறதுக்கு உனக்கு எங்கே அத்தை நேரம்?'' என்றாள் ஹேமா.

''வம்பு பேச அம்மாமிகள் கூட்டம் வரவில்லை என்றால் புத்தகம் படிக்க வேண்டியதுதானே?'' என்றாள் சாரு.

''நல்ல வேளை அத்தை நல்ல புஸ்தகமாக எடுத்து வைத்துக் கொண்டு படித்தாளே. வேறே ஏதாகிலும் புஸ்தகமாக இருந்தால் மேலும் மேலும் வம்புப் பேச்சுக்கு விஷய தானம் கிடைத்தாற் போலாகி யிருக்கும்!'' என்றார் சங்கரன்.





## தவத்தோடிணைந்த தலங்கள் - 2

1. ஆசாரியப் பெருமானின் இஷ்டதெய்வமான காஞ்சி காமாக்ஷியின் திருக் கோயில்.

2. பெரிய காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீ காமகோடி பீடத்தின் தலைமை மடம்.

3. சிவாஸ்தானத்தே இன்றைய குருவரர் உகந்த ஆதிகுரு தட்சிணா மூர்த்தி.











4. காஞ்சியை அடுத்த அம்பிக் கோவிலில் பூர்வ காலக் காமகோடி பீடாதிபதி களான ஒரு "சந்திர சேகர சரஸ்வதி" அவர்கள் பெயரிலான கல்வெட்டு அம்புக் குறிக்குக் கீழ் உள்ளது. இதனைக் கண்டுபிடித்த ஆராய்ச்சி யாளர் நம் ஆசாரியாள்தான்.

5. சர்வ தீர்த்தக் கரையில் உள்ள இந்த முக்தி மண்டபத் தில்தான் பெரியவாள் புதுப் பெரியவாளுக்குத் துறவுத் தீட்சை தந்து மகா வாக்கிய உபதேசம் வழங்கினர்.

6. சர்வ தீர்த்தம்.

7. சின்னக் காஞ்சி மடம். பெரியவாளின் மணிவிழாவை ஒட்டி இங்குதான் அவர்களுக்குக் கனகாபிஷேகம் நடந்தது.





# கார் வண்ணம் இங்கு கண்டேன்

லட்சுமி சுப்பிரமணியம்

**நளினி** கடைசியாக ஒரு முறை கண்ணாடியில் தன்னைச் சரிபார்த்துக் கொண்டாள். 'பாஷன் பரேட்' தொடங்குவதற்கு இன்னும் சில நிமிடங்களே இருந்தன. நெஞ்சில் ஒரு இதமான அழுத்தல். அதே சமயத்தில் கால் பூமியில் பதியாமல் ஒரு மிதப்பு. வங்கி வங்கியாகக் கத்தரித்திருந்த நெற்றி மயிர் மனத்தைப் போல் அலைந்தது.

அவள் பார்வை கண்ணாடி ஜன்னலுக்கு வெளியே ஓடிற்று. அதோ அந்த மரத்தடியில் தான் சந்திரன் காரை நிறுத்திவிட்டு வருவது வழக்கம். அங்கே இன்னும் அவன் காரைக் காணோம். நெஞ்சில் ஒரு சிறு கனத்துடன் நளினி வெளியே அரங்குக்கு வந்தாள். புதுமையான உடை. பின்னணியில் அதை விவரிக்கும் வர்ணனை. சுழலும் பம்பரம் போல் ஒரு மென்மையான அசைவுடன் இருமுறை நடந்து விட்டு ஒதுங்கினாள் நளினி. உள்ளே போகுமுன் அவன் சந்திரனுக்காகப் பதிவு செய்து வைத்திருந்த 'ஸீட்'டைப் பார்த்தாள். அது காலியாக இருந்தது. அவள் மனத்தில் ஓர் ஏக்கம் தோய்ந்தது.

'கிரீன் ரூமி'ல் அடுத்த உடையை மாற்றிக் கொண்டு வரும்போது மறுபடியும் கண்ணாடி ஜன்னல் வழியே கவனித்தாள். மரத்தடியில் சந்திரன் நின்று கொண்டிருந்தான். அன்று புதிதாக ஒரு 'வோக்ஸ் வாகன்' காரைக் கொண்டு வந்திருந்தான் சந்திரன். எந்த நண்பருடையதோ? அதில் அவன் பார்வை பிரமிப்பாய்ப் பதிந்திருந்தது. அதனால்தான் அன்று வரத் தாமதமா? அவள் அவ்வளவு தூரம் கேட்டுக் கொண்ட பின்னரும் கூட? அவள் நெஞ்சில் சிறு வேதனை.

அழகான மேலாடையைப் பக்கத்துக்குப் பக்கம் திருப்பித் திருப்பிக் காட்டிவிட்டு நளினி ஒயிலுடன் திரும்பினாள். அவள் ஓரக் கண் பார்வை வரிசை வரிசையாக அமர்ந்திருந்தவர்களைக் கடந்து சென்றது. சந்திரன் அங்கே உட்கார்ந்திருந்தான். அவள் மனத்தில் ஜில்லென்ற உணர்ச்சி ஒன்று குளிர்ந்து இறங்கிற்று. கையை அலட்சியமாக உதறிக் கொண்டாள். அந்தக் கையில் குழந்தை போல ஒரு தனிக் கவர்ச்சி. மனத்தில் மகிழ்ச்சி துள்ளி அடங்கிற்று.

எண்ணங்கள் ஒன்றுடன் ஒன்று நெய்து ஒன்றிக் குவிந்தன.

சந்திரன் எப்போதும் அப்படித்தான். ஹிப்பிகளுக்கு நீளமான தலைமுடியில் எவ்வளவு ஆசையோ அவ்வளவு ஆசை, அவனுக்கு விதம் விதமான கார்களின் மீதும் உண்டு. பத்திரிகைகளில் அழகான வண்ணத்தில் நளினியை 'மாடலா'க வைத்து எடுத்த விளம்பரம் வலது புறம் இருக்கும். ஒரு கார் விளம்பரம் இடதுபுறம் மூக்கை நீட்டிக் கொண்டிருக்கும். அவன் பார்வை இடதுபுறம்தான் சாயும். அவனுக்குக் கார் மோகம்தான் முதல். நளினியின் அன்பு அடுத்தபடிதான்.

இருவருமாக ஓர் ஆங்கிலத் திரைப் படத்துக்குப் போயிருந்தார்கள். அதில் வந்த மென்மையான காதல் காட்சிகள் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தன. ஒருவரையொருவர் அதிகம் தொடக்கூட இல்லை. முக மலர்ச்சியிலும், ஆழ்ந்த பார்வையிலுமே இருவரும் கொண்டிருந்த அளவு கடந்த காதல் தெரிந்தது. வெளியே வந்தபோது நளினியின் நெஞ்சில் அந்தக் காட்சிகள் சன்னமாக எழுதிய சித்திரங்களாகப் படிந்திருந்தன.

''உங்களுக்குப் படத்தில் எந்த இடம் ரொம்பப் பிடித்திருந்தது?''

''கடைசியில் 'இளைமாக்ஸ்' ஸீனில் வந்த கார்ப் பந்தயம்தான். மலைப் பாதையில்



அந்தக் கார் எவ்வளவு வேகமாக ஓடுகிறது? ஹீரோ தான் அதை எவ்வளவு லாகவமாக ஓட்டுகிறான்? அவனுடைய சாமர்த்தியத்துக்கு அவன் சரியான பரிசு தான்!''

நளினிக்குத் 'திக்'கென்று ஆயிற்று. அவன் மேலே பேசவே இல்லை.

இன்னொரு நாள்.

அன்று அவனுக்கு விடுமுறை. முன்னாலேயே பேசி வைத்துக் கொண்டிருந்தபடி அவளை அவன் பெஸன்ட் நகர் கடற்கரைக்கு அழைத்துக் கொண்டு போனான். அதிகக் கூட்டமில்லாத மணற்கரை. வெளி நாட்டினர் ஆசையாக வந்து குளித்துக்கொண்டிருந்தார்கள். அந்த உல்லாசத்தில் அவர்களுக்குக் கூச்சம்கூட இல்லை.

''நளினி! ஒரு நாள் நானும் இங்கே வந்து குளிக்க வேணும் என்று எனக்கு ஓர் ஆசை'' என்றான் சந்திரன் அவசரமான குரலில்.

''குளிக்க என் பர்மிஷனா?''

''இல்லை. நீயும் எனக்குத் துணையாக—அதற்குத்தான்.''

''சீச்சீ!'' என்று கீழுதட்டைத் திருகிக் கொண்டாள் நளினி. ''நான் மாட்டேன். விளம்பர மாடலாக வரும்போதுகூட நான் அந்த மாதிரி உடைகளுக்கோ காட்சிகளுக்கோ ஒப்புக் கொள்வதில்லை. இங்கே இவ்வளவு பேருக்கு முன்னால்...'' என்று கையை வேகமாக ஆட்டினாள்.

அவன் முகம் சட்டென்று விழுந்தது. ஆனால் சமாளித்துக் கொண்டான்.

அவனுக்குப் பிடித்திருந்த ஆரஞ்சு நிறப் புடவை அணிந்து கொண்டு வந்திருந்தாள் அன்றைக்கு. அவன் விரும்பும் இரட்டைப் பின்னல். வலதுபுறம் காதோரம் செருகிய சிவப்பு ரோஜா. தோளின் வண்ணமும் செழுமையும் தெரியும் சோளி. அவள் புறம் அவன் திரும்பியபோது, கடலோர விளக்குகள் ஏற்றிக் கொண்டது போல் அவள் விழிகளில் ஒரு ஜாலம். ''உனக்குத்தான், உனக்கு மட்டும்தான் சந்தர்!'' என்று சொல்வது போன்ற புன்னகை.

அவன் பார்வை அவள்மீது தங்கவில்லை. அவளைக் கடந்து கடற்கரையை ஒட்டிய சாலையில் நின்றுகொண்டிருந்த காரின் மீது பதிந்தது. ''நளினிக் கண்ணு! வாயேன் இதைப் பார்க்கலாம்'' என்று எழுந்துவிட்டான். அவள் மௌனமாக அவனைப் பின் தொடர்ந்தாள்.

அது ஓர் ஆரஞ்சு நிறக் கார். இரட்டையாக மட்டுமே உட்காரக்கூடிய ஸீட். வலது புறம் சிவப்பு ரோஜா முத்திரை பதித்த கண்ணாடி. சரிவும் குழிவும் தெரிய அளவாக நறுக்கிய 'டாப்'. அதைப் பார்த்துவிட்டு அவன் நளினியின் புறம் திரும்பினான். அவன் கண்கள் புன்னகை புரிந்தன.

''நளினி! இந்தக் காரின் அமைப்புக்கும் உன் 'ஸ்வீட்'டான தோற்றத்துக்கும் என்ன ஒற்றுமை பார்த்தாயா? இதைப் போலவே நீயும் எத்தனை அழகாக இருக்கிறாய்?''

ஆர்தர் கோய்ஸ்லர் ஹங்கேரி நாட்டைச் சேர்ந்தவர். கம்யூனிஸ்ட் கொள்கைகளில் ஆர்வம் கொண்டு அதில் தீவிரமாக ஈடுபட்டுப் பின்னர் பெரு ஏமாற்ற மடைந்து பிரிட்டனில் தஞ்சமடைந்து பிரிட்டிஷ் பிரஜை யாக வாழ்ந்துவருகிறார். ஆங்கிலத்தில் எழுதிப் பிரபல ஆசிரியராகவும் உலக சிந்தனையாளர்களில் ஒருவராக வும் மதிக்கப்படுபவர். அவர் 1959ம் ஆண்டில் இந்தி யாவுக்கு வந்தபோது ஜனவரி 10ந் தேதியன்று சென்னை பழைய மாம்பலத்தில் முகாமிட்டிருந்த காமகோடி ஆசாரிய சுவாமிகளைச் சந்தித்தார். அப்போது நிகழ்ந்த உரையாடலிலிருந்து ஒரு பகுதி:

## காலத்துக்கு ஏற்ற மாற்றம்!

கேள்வி: "மாறி வரும் சமுதாயச் சூழ் நிலைக்கு ஏற்ப ஹிந்து மதக் கோட்பாடுகளும் ஆசாரங்களும் மாற வேண்டும் என்று ஆசாரிய சுவாமிகள் கருதுகிறீர்களா?"

பதில்: "இந்தக் காலத்தில்தான் சமுதா யத்தில் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்ப தில்லை. மிகப் பூர்வமான காலத்திலும்கூட சமுதாயத்தில் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. அந்தக் காலத்துச் சமு தாயப் புரட்சிகள் இப்பொழுது - நிகழ்வது போல் தீவிரமாக இருக்கவில்லை என்று வேண்டுமானால் சொல்லலாமே தவிர, சமுதாயப் புரட்சிகள் தொடர்ந்து நிகழ்ந்துள்ளன. ஆனால் சில அடிப்படைக் கோட்பாடுகள் சிதைக்கப்படாமல் காப்பாற்றப்பட்டு வந்துள்ளன. இந்தச் சமுதாய மாறுதல்களைப் புயலுக்கு ஒப்பிடுகிறோம். புயல் நம்மை அடித்துக் கொண்டு போகாமல் அடிப்படைக் கொள்கைகளைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு உறுதியாக நிற்க வேண்டும். ஒழுக்கமும், தர்மமும் மக்கள் வாழ்வில் குறைந்து வருவதை நாம் காணலாம். அலெக்ஸாந்தர் இந்தியாவுக்கு வந்தபோது, இங்கு இந்நாட்டில் திருடுதல் என்பதே இல்லை என்று கிரேக்க ஆசிரியர்கள் எழுதிவைத் திருக்கிறார்கள். அதே உயர்ந்த வாழ்க்கை முறை இந்நாட்டில் அதற்குப் பின்னால் கடைப் பிடிக்கப்படவில்லைதான். மக்கள் ஒழுக்கத் தைக் கைவிட்டுவிட்டார்கள். அதனால்ஆசாரிய புருஷர்களும் தர்மோபதேசம் செய்ய வேண் டியவர்களும் காலத்துக்கு ஏற்றபடி மாற வேண்டும் என்று சொல்ல முடியுமா? அதே போல் ஆத்மிக வாழ்க்கைக்குரிய நெறிமுறை களிலும் சமுதாய மாறுதல்களுக்கு ஏற்ப மாறுதல்கள் என்பதற்கு இடமில்லை!"





நளினிக்குக் காலடியில் பூமி விட்டுக் கொண்டாற்போல் இருந்தது. அவள் மகிழ்ச்சி அனைத்தும் சட்டென்று நொறுங்கி மறைந்தது.

காரில் அவனுடன் பக்கத்தில் அமர்ந்தால் ஸ்டியரிங் சக்கரத்தின் அழகு, டாஷ்போர் டின் மெருகு, கார் — ரேடியோவின் கண்ணைப் பறிக்கும் நிறம் இவற்றைப் பற்றித்தான் அவளோடு பேசுவான். ஒரு பொத்தானை அழுத்தி உள்ளே குளிர் காற்றை வரவழைப் பான். இன்னொன்றை இழுத்து உள் விளக்கு களைக் கண் சிமிட்ட வைப்பான். இதெல்லாம் அவளுக்குப் பிடித்திருந்தது — ஆரம்பத்தில். வரவர இதுவே சலிப்பாக இருந்தது. வெறுப் பாகவும் தோன்றியது.

அது ஒரு நன்கொடை நிகழ்ச்சி. புகழ் பெற்ற நடிக நட்சத்திரங்கள் கலந்துகொள்வ தாக இருந்தது. அவளுக்குச் சிறப்பு நிகழ்ச்சி கொடுத்திருந்தார்கள். ஒரு வாரத்துக்கு முன்பே அவன் நேரம் ஒதுக்கிக் கொள்ள வேண்டும் என்று அவள் தகவல் கொடுத்திருந் தாள். அவனும் ஒப்புக் கொண்டிருந்தான். அதன் பின் இரண்டு முறை 'போனில்' ஞாப கப்படுத்தியாகி விட்டது.

ஒவ்வொரு தடவையிலும் அவன் சொன்ன பதில்கள் அவளுக்கு நினைவிருந்தன. சந்திர னுக்கு அழகாக அலங்காரமாகப் பேசத் தெரி யும். அப்புறம் அவை ஒன்றையும் நினை வுக்குக் கொண்டு வந்து அனுபவிப்பாள். இந்தத் தடவை அவன் பேச்சிலும் உறுதி யாகக் கொடுத்த வார்த்தையிலும் அவளுக்கு மிகுந்த நம்பிக்கை. அவன் வரவில்லை.

நிகழ்ச்சி முடிந்து அவள் திரும்பியபோது அவள் வாசலில் அவளுக்காகக் காரில் காத்துக் கொண்டிருந்தான். அவள் அலட்சியமாக அவனைப் பார்க்காதது போலக் கடந்து போனாள். "நளின்!" அவன் செல்லமான இரகசியக் குரல் காதில் விழுந்த பின் அவளால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிய வில்லை. திரும்பிப் பார்த்தாள். காரின் கதவைத் திறந்து விட்டான் சந்தர். தன் னுடைய ஏமாற்றம் அவ்வளவையும் சமா ளித்துக் கொண்டு உள்ளே ஏறி அமர்ந்தாள். ஆனால் இதழ்களில் வழக்கமான புன்னகை யைக் காணோம்.

கார் கிளம்பிற்று. கடற்கரைச் சாலை வழியாகப் போயிற்று. அவள் பேசவே யில்லை. அவன்தான் பேசிக் கொண்டு வந்தான், குர லில் ஒரு தனியான உற்சாகத்துடன்.

"பழைய கார்கள் ரேஸ் விஷயமாகப் போக வேண்டி யிருந்தது நளின்! ஆஸ்டின், ப்யூக், செவர்லே, மெர்ஸிடஸ் பென்ஸ் எல்

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*

**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects — political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours — their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes — new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**

**The Illustrated Weekly of India**

# தலையாய கூந்தல் அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது க்ளீம் ஷாம்பு— கேசத்தைப் பட்டுப்போல் சுத்தமாகவும், படியும்படியும் வைப்பதற்கு.



க்ளீம் ஷாம்பு கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கச் செய்கிறது. கேசத்தைத் துப்புரவாக சுத்தம் செய்கிறது. பட்டுப் போலவும் பளபளப்பாகவும் ஆக்குகிறது.



புது டில்லியைச் சேர்ந்த கூந்தல் அலங்கார நிபுணர் மேடம் பி. ராய் க்ளீம் ஷாம்புவைப் பாராட்டுகிறார். "கேசத்தை மிருதுவாகவும் படியும் படியும் வைக்கிறது. கேசம் நீளமானாலும் குட்டையானாலும் விரும்பும் வகையில் படியவைக்க உதவுகிறது க்ளீம்" என்கிறார் அவர்.

க்ளீம் ஷாம்பு கேசம் படிவதற்கும் நவீன கூந்தல் அலங்காரத்துக்கும் துணை புரிகிறது.



அதன் பிரெஞ்ச் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அதிகபட்ச சிக்கனம் பெற 400 மி.லி. பாட்டில் வாங்குங்கள்.






## க்ளீம் ஷாம்பு

கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கிறது

3 சைஸ்கள் : 100 மி.லி., 200 மி.லி., 400 மி.லி.

Geoffrey Manners & Co. Ltd.

G.32

லாம் கலந்து கொள்ளப் போகின்றன இந்த ரேஸில். ஒரு 1913ம் ஆண்டு பியட் கார் கூட வருகிறது. ஓ! ஹௌ லவ்லி?'' — அவளுக்கு நேர்ந்த ஏமாற்றத்தைப் பற்றி விசாரிக்கவே இல்லை அவன் ?

''எனக்கு 'லவ்லி'யாகத் தோன்றவில்லை'' என்றாள் பட்டென்று.

கார் ஓட்டிக் கொண்டிருப்பதையும் மறந்து அவள்புறம் பார்க்க, சாலையை விட்டுக் கண்களைத் திருப்பினான் சந்தர். ''மறுபடியும் சொல்லு. பார்க்கலாம்!''

''ஆமாம். எனக்குப் பிடிக்கவில்லை உங்கள் கார் மோகம். ஏதாவது ஒரு பெண்ணைக் குறிப்பிட்டுச் சொல்லுங்கள் — உங்கள் கார் ஆசையைச் சகித்துக் கொண்டு, உங்கள் பின்னால் கையைக் கட்டிக் கொண்டு நிற்கும் பொறுமை உள்ள யாராவது ஒரு பெண்ணை!''

''எனக்கு உன்னைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் தெரியாது நளினி!'' என்றான் சந்தர் பரிதாபமாக. அவனை யறியாமல் காரை நிறுத்தி விட்டான். அவள் சட்டென்று இறங்கி, கைப் பையைப் பெண்டுலம் போல் ஆட்டியபடி மறைந்துவிட்டாள். சந்தரின் குரல் காதில் இரண்டு தடவை தொடர்ந்து கூப்பிட்டது போல் விழுந்தது. அவள் திரும்பிப் பார்க்கவில்லை.

**கா**லையில் மகாபலிபுரத்தில் ஒரு சுற்றுலா விளம்பரத்துக்கான 'ஸ்டில்'' படங்கள் எடுக்க வேண்டி யிருந்தது. அவன் காலையிலேயே ஸ்டுடியோவிலிருந்து வந்த காரில் கிளம்பிவிட்டான். அவன் திரும்பி வந்த போது இரண்டு மணி ஆகி விட்டது.

வெய்யில் நேரம்தான். ஆனால் அவள் மனத்தில் முதல் நாள் மாலை இருந்த கொதிப்பு இல்லை. சந்தரைப் பார்க்க முடியுமானால் சற்று நிதானமாகப் பேசலாம்.

'போன்' செய்த போது அவனுடைய நண்பன் ராமுவின் குரல் கேட்டது. ''காலையிலிருந்து உங்களை 'போனி'ல் கிடைப்பீர்களா என்று முயன்று கொண்டிருந்தேன். நேற்று இரவு கடற்கரைச் சாலையில் ஒரு விபத்து. சந்தரின் கார் அதில் அகப்பட்டுக் கொண்டு விட்டது. அவன் ஆஸ்பத்திரியில் இருக்கிறான். பயப்படாதீர்கள்... அடிமட்டும் தான்...''

ஆஸ்பத்திரியின் பெயரையும் அறையையும் கேட்டுத் தெரிந்து கொண்டு ஓடினாள் நளினி. அந்த விபத்து அவளால் நேர்ந்ததுதான். அத்தனை அழகான காரை விபத்தில் மாட்டிக் கொள்ளும்படி அவன் ஓட்டி யிருக்கவே மாட்டான். அவன் அஜாக்கிரதை அவள் கிளப்பி விட்ட மனப் புயலினால் ஏற்பட்டதுதான்.

வெண்ணிறப் போர்வையின் அடியிலிருந்து அவன் கையை வெளியே எடுத்தான். கண்களில் இலேசான சோகம். அவன் கை 'ஸ்டியரிங்'கைப் பிடிப்பதைப் போல் அவள் கையை லாகவமாகப் பிடித்தது. ''எங்கே என்னை விட்டுப் போய் விடுவாயோ என்று பார்த்தேன்!''

''இல்லை சந்தர். நான் போக மாட்டேன். ஏதோ சொல்லி உங்கள் அமைதியைக் கலைத்து விட்டேன். தப்பு என் மேல்தான். விபத்து என்னால்தான்!''

''பரவாயில்லை நளினி. விபத்தில் நினைவிழக்கும் வேளையில் எனக்கு ஒரே ஒரு சந்தோஷம். நீ என் பக்கத்தில் இல்லை. விபத்தில் மாட்டிக் கொள்ளவில்லை. நல்லவேளையாகக் கோபித்துக் கொண்டு முன்னாலேயே இறங்கிப் போய் விட்டாய். கார் உருத் தெரியாமல் நசுங்கிப் போனாலும் பரவாயில்லை. உன் மேல் ஒரு சிறு கீறல் விழுந்திருந்தால் கூட என்னால் தாங்கிக் கொண்டிருக்க முடியாது!''

ஒரு தனிப் பரிவுடன் நளினி குனிந்து அவன் முகத்துடன் முகம் சேர்த்துக் கொண்டாள். உள்ளே வந்த நர்ஸ் நாசூக்காக வெளியே நகர்ந்தாள்!

XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX-XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX

## வேண்டாத பரிசு !

ரிச்சர்ட் நிக்ஸனுக்கு ஒரு டேப்ரிகார்டரைப் பரிசாகக் கொடுத்தால் கோபித்துக் கொள்வார். அதே போல் யாருக்கு எந்தப் பரிசைக் கொடுத்தால் கோபித்துக் கொள்வார்கள்?

எழுதி அனுப்புங்கள். பிரசுரமாகும் ''வேண்டாத பரிசு''க்குச் சன்மானம் உண்டு. உறையின் மீது ''வேண்டாத பரிசு'' என்று குறிப்பிடவும்.

யோசனை: பாலி — ஆசிரியர், கல்கி.

## வாட்டர்கேட் விஷயம் !

● வாட்டர்கேட் செய்திக்காக 'நியூயார்க் டைம்ஸ்' வாஷிங்டனுக்கு ஒன்பது செய்தி நிருபர்களையும் நான்கு உதவி ஆசிரியர்களையும் அனுப்பியது.

● வாஷிங்டன் போஸ்ட் 18 செய்தி நிருபர்களைச் செய்திகளை வழங்க ஏற்பாடு செய்தது. பல மாதங்கள் இந்த நிருபர்கள் 'வாட்டர் கேட்' விஷயத்துக்காக அலைந்திருக்கிறார்கள்.

● அசோஸியேடட் பிரஸ், யுனைடெட் பிரஸ் ஆகிய செய்தி நிறுவனங்கள் 3,50,000 வார்த்தைகளை வாட்டர்கேட் சம்பந்தமாக அனுப்பி யிருக்கின்றன.

'டைம்' — பி. எஸ். எம்.

**கிழக்கு வங்கத்தை நிலைக்களனாக வைத்து 1949ல் எழுதப்பட்ட இக்கதையின் ஆசிரியர் சையத் வலீயுல்லா. பல நவீனங்களும் சிறுகதைகளும் எழுதியுள்ளார். பாகிஸ்தானின் வெளிவிவகார காரியாலயத்தில் பணியாற்றி விட்டு யுனெஸ்கோவில் சேர்ந்தார். அவர் 1971ல் பாரிஸில் இளவயதிலேயே காலமானார்.**

# துளசிச்செடி



அந்த அகலப் பாலத்திலிருந்து நூறு கஜ தூரத்தில் அந்த வீடு இருந்தது. அது ஒரு பெரிய இரண்டு மாடிக் கட்டிடம். சாலையை ஒட்டினாற்போலவே உயரமாக எழும்பி நின்றது. வீட்டின் கொல்லைப்புறத்தில் மா, பலா, முந்திரி முதலிய மரங்கள் அடர்த்தியாக வளர்ந்து இருள் கவிந்திருந்தது.

இவ்வளவு இடம் இருக்கையில் வீட்டின் முன் பக்கம் சிறிது வெற்றிடம் விட்டிருந்தால் என்ன? ஏதாவது பூந்தோட்டம் போட்டிருக்கலாமல்லவா? மாலை நேரம் வீட்டுக்குத் திரும்பி வந்தால் ஒரு பிரம்பு நாற்காலியோ அல்லது ஒரு சாய்மான நாற்காலியோ போட்டுக்கொண்டு உட்கார்ந்து ஓய்வு எடுத்துக் கொள்ளலாமல்லவா? மாட்டின் நிச்சயமாக ஒரு பிரம்பு நாற்காலி வாங்கியிருப்பான். ஹுக்காப் பிடிக்கும் அர்ஜத் ஓர் அழகான பைப் வாங்கிப் புகைத்துக்கொண்டு பொழுதைப் போக்கி யிருப்பான்.

காதர் நன்றாகக் கதை அளப்பவன். மாலை நேரத்தில் குளிர்ந்த காற்றடிக்கும் பொழுது அவன் உற்சாகமாகக் கதைகள் பல சொல்லியிருப்பான்.

அந்த வீட்டுக்காக அவர்கள் போராட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அந்த வீடு அவர்கள் ஆக்கிரமித்துக்கொண்டது. நாட்டுப் பிரிவினை ஏற்பட்டு அவர்கள் ஓடிவந்தபோது தங்குவதற்கு இடம் தேடி அலைந்தார்கள். அப்பொழுது அவர்கள் கண்களுக்கு இந்த வீடு தென்பட்டது. பெரிய வீடு! மனித சஞ்சாரமின்றி வெறிச்சோடிக் கிடந்தது. அதைப் பார்த்தபோது அவர்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது. அவர்கள் ஒரு கூட்டமாக வந்து மகிழ்ச்சி ஆரவாரத்தோடு அதை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அப்படி ஆக்கிரமிப்புச் செய்தது பகற் கொள்ளைக்கு ஒப்பான காரியம் என்று அவர்களுக்குப் படவில்லை.

ஒருவேளை மனச்சாட்சி உறுத்தியிருந்தாலும் அந்தச் சமயத்தில் நிலவிய குதூகலம் தாங்கள் செய்தது தவறு என்ற எண்ணத்தை அவர்கள் உள்ளத்தில் பதிய விடாமல் செய்து விட்டது.

அன்று மாலைக்குள் நகரம் முழுதும் செய்தி பரவிவிட்டது. மற்ற அகதிகளும் அங்கே வர முயன்றனர். ஆனால் முதலில் வந்து ஆக்கிரமித்துக் கொண்டவர்கள் பின்னால் வந்தவர்களிடம் 'இங்கு கொஞ்சம் கூட இடம் இல்லை. இந்தச் சின்ன அறையில் ஆறுபேர் இருக்கிறோம்' என்று சொல்லி விரட்டி விட்டார்கள்.

அவ்வீட்டில் குடியேறியவர்கள் எல்லோருமே கல்கத்தாவின் நாற்றமும், அழுக்கும், சகதியும் மண்டிய சந்துகளில் வாழ்ந்தவர்கள். தெருவோர நடைபாதைகளில் வாழ்ந்தவர்கள். அவர்களுக்கு இவ்வளவு பெரிய வீடு கிடைத்ததில் சொல்லி முடியாத மகிழ்ச்சி. பெரிய பெரிய அறைகளும், காற்றோட்டமான ஜன்னல்களும் கொண்ட அந்த வீட்டைப் பார்த்தபொழுது அவர்கள் கதைகளில் கேட்ட அரண்மனையே கிடைத்து விட்டாற் போல் மகிழ்ச்சி கொண்டனர். கல்கத்தாவில் யூனஸ் வசித்த வீட்டில் கச்சிலிருந்து வந்த தோல் வியாபாரி ஒருவனும் வசித்து வந்தான். யாரோ அவனுக்குத் தோலின் துர்க்கந்தம் எலும்புருக்கி போன்ற நோய்க் கிருமிகளை அழித்து விடும் என்று சொல்லியிருந்தார்கள். அந்த நம்பிக்கையில் அங்கு குடியேறியிருந்த யூனஸ் இப்போது இந்தப் பெரிய மாளிகையையும் பெரிய அறைகளையும் ஜன்னல் வழியாக சூரியோதயத்தின் அழகையும் கண்ட பிறகு தான் முன்பு வாழ்ந்த வீட்டையும், தெருவையும் நினைக்கக் கூடக் கூசினான்.

வீட்டின் பின்புறம் சமையல் அறையிலிருந்து பத்தடி தூரத்தில் ஒரு துளசி மாடம் இருந்தது. ஒரு நாள் காலை மொடாபர் பல் துலக்கிக் கொண்டிருந்தபோது அவன் கண்களில் 'துளசி மாடம்' பட்டது. மொடாபர் இயல்பாகவே அமர்க்களம் செய்பவன். துளசிச் செடியைக் கண்டதும் கூப்பாடு போட்டான். என்னமோ ஏதோ என்று வீட்டுக்குள் இருந்தவர்கள் அனைவரும் வெளியே வந்து அவனைச் சுற்றிக் குழுமிவிட்டார்கள்.

''இதோ பாருங்கள், துளசிச் செடி. இதனை வேரோடு கெல்லி எறிய வேண்டும். நாம் இங்கே தங்குவது என்று தீர்மானித்துவிட்ட பின் இந்து மதத்தின் வாடையே இங்கே இருக்கக் கூடாது'' என்றான் மொடாபர்.

எல்லோரும் துளசிச் செடியைப் பார்த்தார்கள். அதன் பச்சை இலைகள் எல்லாம் பழுத்து மஞ்சளாக ஒளியிழந்து காணப்பட்டன. யாருமே அதனை இத்தனை நாட்களாகக் கவனித்துப் போஷிக்கவில்லை. அதைச் சுற்றிப் புல் மண்டி வளர்ந்திருந்தது. அதன் பயனாக இதுகாறும் துளசிச் செடி யார் கண்களிலும் படாமல் இருந்திருக்கிறது.

கூடியிருந்தவர்கள் எல்லோரும் திடீரென்று மௌனமாயினர்.

அவர்கள் மௌனமாக இருப்பதைக் கண்டு, மொடாபர் ''என்ன யோசிக்கிறீர்கள்? யோசிப்பதற்கு ஒன்றுமே இல்லை. வேரோடு பிடுங்குங்கள்'' என்று கத்தினான்.



அவர்களுக்கு இந்துக்களின் பழக்க வழக்கங்கள் தெரியாது. ஒவ்வொரு இந்துவின் இல்லத்திலும் மாலை நேரங்களில் இல்லத்தரசி துளசிச் செடிக்கு அடியில் சிறு அகல்விளக்கு வைத்து வணங்குவாள் என்று மட்டும் கேள்விப்பட்டிருந்தார்கள். 'அப்படியானால் இந்தச் செடியின் அடியிலும் ஓர் இந்துப் பெண் ஒவ்வொரு நாள் மாலையும் விளக்கேற்றி வைத்து வணங்கியிருப்பாள் அல்லவா? வான வீதியில் மாலை வேளையில் நக்ஷத்திரம் பூக்கும் நேரத்தில் இந்தச் செடியின் அடியில் ஓர் அகல் விளக்கின் மெல்லிய சுடர் அமைதியாக அழகுற ஒளி பரப்பிக் கொண்டிருந்திருக்கும். மாலை மங்கி இருள் கவ்வும் நேரத்தில் இரத்தச் சிவப்புடன் மிளிரும் நெற்றித் திலகம் இந்தத் துளசியின் பாதத்தைக் தொட்டு வணங்கியிருக்கும். இப்படி ஒவ்வொரு நாளும், ஆண்டாண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வந்திருக்க வேண்டும். இந்த வீட்டுக்குள் புயல் அடித்திருக்கலாம், இருள் கவிந்திருக்கலாம். இந்தக் குடும்பத்துக்கே ஒளியாகத் திகழ்ந்தவரின் ஒளி அணைந்திருக்கலாம். எனினும் இந்தத் துளசிச் செடிக்கு விளக்கேற்றும் சடங்கு நாள் தவறாமல் நடந்திருக்கும்!

'இப்படி இந்தத் துளசிச் செடிக்கு விளக்கேற்றி வந்த இல்லத்தரசி இன்று எங்கே? அவள் எங்கே போனாள்? ஏன் போனாள்? 'மாட்டின்' ரயில்வேயில் வேலை செய்தவன். அவன் நினைத்தான், ஒருவேளை அவள் கல்கத்தாவுக்குப் போயிருக்கலாம். அல்லது அசன்சாலுக்குப் போயிருக்கலாம். அல்லது ஹௌராவில் இருக்கும் உறவினர் வீட்டுக்குப் போயிருக்கலாம். அவள் எங்கே சென்றிருந்தாலும் ஒவ்வொரு நாள் மாலையும் அவள் இந்தத் துளசிச் செடியை 'நினைக்காமல் இருக்க மாட்டாள். அப்படி நினைக்கும் பொழுது அவள் கண்களில் நீர் மல்கிப் பார்வையும் மங்கும்.

யூனஸுக்கு நேற்றிலிருந்து நீர் கொண்டு உடல் நிலை சரியில்லை. அவன்தான் முதலில் பேசினான். ''அது அங்கேயே இருக்கட்டும். நாம் அதைத் தொழ வேண்டியவர்கள் அல்ல. ஆயினும் துளசிச் சாறு ஜலதோஷத்துக்கும் இருமலுக்கும் ஏற்ற மருந்து.''

மொடாபர் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்த்தான். எல்லோரும் யூனஸ் சொன்ன கருத்தையே கொண்டிருந்தார்கள். அவர்களில் 'எனயத்' என்பவன் ஒரு மத குரு போன்றவன். அவன் தாடி வைத்திருந்தான். ஒரு நாளைக்கு ஐந்து முறை நமாஜ் சொல்லுவான். தினமும் காலையில் குரான் ஓதுவான். அவனும் யூனஸின் சொல்லுக்குத் தடை சொல்லவில்லை. ஒருவேளை அவனும் இந்த வீட்டுக்குரியவள் கண்களில் நீர் மல்க நிற்பதாக உருவெளித் தோற்றத்தில் கண்டானோ? எப்படியோ துளசிச் செடி பழுதில்லாமல் தொடர்ந்து அந்த மாளிகையில் வாழ்ந்தது.

"இந்துக்கள்தான் எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படைக் காரணம். அவர்களுடைய

அற்பத்தனத்தின் காரணமாக, மூடப் பிடிவாதத்தின் காரணமாக, இந்த நாடு பிளவுற்றது' என்று ஷபீர் பேச்சுவாக்கில் இந்துக்களைத் தாக்கினான்.

அதைத் தொடர்ந்து இந்துக்கள் செய்த அநீதிகளுக்கும் கொடுமைகளுக்கும் பல உதாரணங்களை எடுத்துக் கூறினான். அதைக் கேட்டு அவர்கள் இரத்தம் கொதித்தது. எனினும் அவர்களில் 'மக்சத்-மியான்' மட்டும் அவ்வப்போது ஆட்சேபித்தான்.

''இந்துக்கள் அப்படியொன்றும் குற்றவாளிகளல்ல. அப்படி இந்துக்களே குற்றவாளிகள் என்றாலும் அவர்களுக்கு நாமொன்றும் குறைந்தவர்களல்ல'' என்றான். அதைக் கேட்டு 'மொடாடர்' பற்களை நறநறவென்று கடித்தான். மக்சத்-மியான், ''நாம் அவர்கள்தான் குற்றவாளிகள் என்று ஓங்கிப் பேசலாம். அதே போல் அவர்களும் நாம்தான் குற்றவாளிகள் என்று அடித்துச் சொல்லலாமே!'' என்றான்.

**யா**ரோ தெரியவில்லை, துளசி மாடத்திலிருந்த புல் பூண்டைக் களையெடுத்திருந்தார்கள். பழுத்து மஞ்சளான இலைகள் எல்லாம் காய்ந்து உதிர்ந்து அவற்றுக்குப் பதிலாகப் புதுத் தழைகள் பச்சைப் பசேலென்று காட்சி யளித்தன. யாரோ அதற்குத் தினம் தண்ணீரும் ஊற்றி வந்திருக்கிறார்கள். அப்படித் தண்ணீர் ஊற்றியவர்கள் நாலு பேர் அறிய ஊற்றவில்லை. இந்த மாதிரிக் காரியங்களைப் பகிரங்கமாகச் செய்ய வெட்கமாகத்தானே இருக்கும்?

ஒரு நாள் மடாபர் மிகுந்த பரபரப்புடன் வந்து, ''போலீஸ்காரர்கள் வருகிறார்கள்'' என்று அறிவித்தான்.

போலீஸ்காரர்களா? அவர்கள் ஏன் வருகிறார்கள்? தெருவோடு ஓடிக் கொண்டிருந்த திருடன் எவனாவது இந்த வீட்டுக்குள் நுழைந்து விட்டானோ? இந்த வீட்டில் இப்பொழுது இருப்பவர்கள் அத்தனை பேருமே ஒருவிதத்தில் திருடர்கள்தான். ஆனாலும் அவர்கள் ஓடி வந்து ஒளிந்துகொள்ளவில்லை.

போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வீட்டு வாசலில் வந்து நின்று நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டார். அவர் பார்க்க மிகவும் சாதுவாக இருந்தார். அவருக்குப் பக்கத்தில் இரண்டு போலீஸ்காரர்கள் கைகளில் துப்பாக்கியுடன் நின்று கொண்டிருந்தனர். அவர்களுடைய முகங்களில் பெரிய மீசைகள் இருந்தாலும் இன்ஸ்பெக்டரை விடச் சாதுவாகவே தோற்றமளித்தார்கள்! அவர்கள் முகட்டைப் பார்த்துக் கொண்டு மௌனமாக நின்றார்கள்.

மாட்டின், பணிவோடு, ''ஐயா, உங்களுக்கு யார் வேண்டும்?'' என்று கேட்டான். சப் இன்ஸ்பெக்டர், ''நீங்கள் எல்லோருமே வேண்டும். நீங்கள் அக்கிரமமாக இந்த வீட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறீர்கள். இருபத்து நாலு மணி நேரத்தில் நீங்கள் காலி செய்யவேண்டும்'' என்று சொல்லிச் சர்க்கார் உத்தரவையும் காட்டினார்.

வீட்டுச் சொந்தக்காரர்கள் திரும்பி வந்திருக்க வேண்டும். ரயிலை விட்டு இறங்கியதும் நேரே இங்கே வந்திருப்பார்கள். இங்கு இருக்கிற நிலவரத்தைப் பார்த்துவிட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் புகார் செய்திருப்பார்கள் என்று மாட்டின் நினைத்தான். அப்சல் கழுத்தை நீட்டி வீட்டுக்காரர்கள் போலீசுடன் வந்திருக்கிறார்களோ என்று எட்டிப் பார்த்தான். யாரையும் எங்கேயும் காணவில்லை.

''இந்த உத்தரவு எதற்கு? வீட்டுக்காரர் ஏதாகிலும் புகார் செய்திருக்கிறாரா?'' என்று கேட்டார்கள். இதற்கு சப் இன்ஸ்பெக்டர், ''இல்லை. அரசாங்கத்துக்கு இந்த வீடு தேவை'' என்று பதில் சொன்னார்.

மகிழ்ச்சி நிலவிய அந்த வீட்டில் இப்போது சோகம் நிலவியது. அவர்கள் யோசித்தனர்: எங்கே போவது என்பதைப் பற்றித்தான். ஒரு வழியும் தோன்றாமற் போகவே, கோபமாக, ''நாங்கள் எங்கேயும் போக மாட்டோம். இங்கேதான் இருப்போம். யார் வந்து எங்களை அகற்றுகிறார்கள், பார்க்கலாம். இந்த வீட்டு வாசற்படியைத் தாண்டி வீட்டுக்குள் நுழைபவன் எங்கள் பிணத்தின் மீது கால் வைத்துத்தான் நுழைய வேண்டும்'' என்று பேசினார்கள்.

இப்படி அவர்கள் பேசியதற்குக் காரணம், சில மாணவர்கள் இதே போல் ஒரு வீட்டை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். மிக உயர்ந்த அதிகாரிகளால்கூட அவர்களை அப்புறப்படுத்த முடியவில்லை. அது அவர்களுக்கு ஞாபகம் வந்ததால் மேற்கண்டவாறு பேசினார்கள். ஆயினும் நாளாவட்டத்தில் அவர்கள் வார்த்தைகளின் வேகம் குறைந்தது.

ஒரு நாள் அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து அந்த வீட்டைக் காலி செய்தார்கள். அவர்கள் புயல் போல் வந்தார்கள். புயல் போலவே மறைந்தார்கள். துண்டுப் பத்திரிகைக் காகிதங்கள், துண்டுக் கயிறுகள், பீடித் துண்டுகள், கிழிந்த செருப்புக்கள் ஆகியவற்றை அந்த வீட்டில் எறிந்துவிட்டுப் போனார்கள். அரண்மனை போன்று காட்சி யளித்த அந்த வீட்டின் வாயிற் கதவுகளும் ஜன்னல்களும்வெறிச்சோடிக் காணப்பட்டன. பாவம், அவர்கள் அந்த வீட்டில் நீண்ட நாட்கள் தங்கக் கொடுத்து வைக்கவில்லை.

வீட்டுக் கொல்லையில், அடுக்களையின் சமீபத்தில் இருந்த துளசிச் செடி மீண்டும் காய்ந்து விட்டது. அதன் இலைகள் மீண்டும் மஞ்சளாகிப் பழுக்கத் தொடங்கி விட்டன. போலீஸ்காரர்கள் வந்து வீட்டை விட்டு வெளியேறும்படி உத்தரவிட்ட நாளிலிருந்து யாருமே அதற்குத் தண்ணீர் ஊற்றவில்லை. அவர்கள் அந்தச் செடியை மறந்துவிட்டார்கள். ஆனால் எங்கேயோ வெகு தூரத்தில் கண்களில் நீர்மல்கி நிற்கும் அந்த வீட்டுக்காரியின் கண்களையுமா மறந்துவிட்டிருப்பார்கள்?

துளசிக்குத்தான் அவர்கள் ஏன் தன்னை மறந்து விட்டார்கள் என்று தெரியும். மனிதன் விரும்பினால் அதைக் காப்பாற்றலாம்; அதேபோல அழிக்க வேண்டும் என்று நினைத்தால் அதே நிமிடம் அழித்தும் விடலாம். பாவம், தானாகவே உயிர்-வாழ்ந்து செழிக்கும் ஆற்றல் எளிய துளசிச் செடிக்கு ஏது?

தமிழாக்கம்: **எஸ். வி. எஸ்.**

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

உங்கள் குடும்பத்தினரின்
உடல்நலம் ஓங்கியிருக்க
அவசியம் அளியுங்கள் மிகச்
சிறந்ததையே

# அவர்களுக்கு விவா கொடுங்கள்.




விவா நூதன உணவு தொழில் நுட்பத்திறமையில் உருவானது. இதில் மற்ற ஆரோக்கிய உணவுப் பானங்களில் உள்ளதைப்போன்று தூய்மையான, முழுமை பெற்ற ஆடைப்பாலும் பார்லி மால்ட்டும் உள்ளன. ஆயினும் விவாவில் மட்டுமே கோதுமை மால்ட் அடங்கியுள்ளது.

கோதுமை மால்ட் எதற்கு?

எதற்கெனில், அதில் வளமைமிக்க கார்போஹைட்ரேட், புரதங்கள், விடமின்கள் மற்றும் கனிஜ சத்துக்கள் எளிதில் சீரணிக்கும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

கோதுமை மால்ட் கலந்திருப்பதால் விவா அதிக அளவு ஊட்டச்சத்து உள்ளதாய், பூரணமான இன்சுவையோடு, வளமிக்க பொன்னிறம் கொண்டு, உடனடியாகக் கரையும் தன்மையோடு விளங்குகிறது.

ஆகவே, உங்கள் அன்றாட உணவிலுள்ள பற்றாக்குறைகளை ஈடுசெய்ய சரியான, போதுமான ஊட்டச் சத்து அளிக்கவேண்டுமென்றால் அதற்கு விவா போல வேறு எதுவும் சிறந்ததல்ல

மிகச் சிறந்ததையே தேர்ந்தெடுக்க இதோ அரியதொரு வாய்ப்பு.

விவாவையே தேர்ந்தெடுங்கள்,

ASP/JIL-V-IA/73 TAM





இந்தியாவில் தயாரிப்போர்,
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

# விவா

உற்சாகமான ஆரோக்கிய வளர்ச்சிக்கு தினமும் விவா.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)